சு. அகிலேந்திரலிங்கம்.
1-12-58.
575

இசைக் கழக வெளியீடு 1.

தென்னாட்டு வள்ளல் - ராஜா ஸர்

# அண்ணாமலைச் செட்டியார்

அவர்களின்

# சரித்திரம்



எழுதியவர்
எம். என். முத்துக்குமாரசுவாமிப் பாவலர்

1941




பதிப்பித்தோர்
தமிழிசைக் கழகத்தார்
ராயப்பேட்டை :: சென்னை

57-5

பலமொழிப் புலவர் வித்வான்

திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரம் பிள்ளை

M. A., B. L., M. O. L., அவர்கள் அளித்த

## சிறப்புரை

அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தை நிலை நாட்டித் தமிழிசை பரவப் பத்தாயிர முங் கொடுத்துத் தமிழிசை இயக்கத்திற்கு அடி கோலிய திரு. செட்டிநாட்டரசர் பெருமான் (Raja Sir Annamalai Chettiar of Chettinad) வரலாற்றை அவரது மணி விழா வெளியீடாகத் தமிழிசைக் கழகத்தார் வெளியிட முன்வந்ததும், அதனை நமது நண்பர் திரு. எம். என். முத்துக்குமாரசுவாமிப் பாவலரவர்கள் தெளிவாகவும், அழகாகவும் எழுதி, செட்டிநாட்டரசர் மரபினையும் அவர் நிறுவிய அறங்களையும் நாம் அறியுமாறு உதவியதும் மிகமிகப் பொருத்தமேயாம். செட்டிநாட்டரசர் போலப் பேரறங்கள் செய்து பெருமை பெறத் தமிழ் நாட்டார் அனைவரையும் இந்நூல் தூண்டுமாக.

இதனை வெளியிட்ட இசைக் கழகத்தார்க்கும், எழுதி உதவிய பாவலர்க்கும் தமிழர் நன்றி யுரியதாகுக.

‘தமிழகம்’ சிந்தாதிரிப்பேட்டை } இங்ஙனம், தெ. பொ. மீனுட்சிசுந்தரன்

## மூன்று காரணங்கள்

பத்து ஆண்டுகட்கு முன்னர் வடலூர் இராமலிங்க வள்ளலாரின் சரித்திரமொன்று எழுதி வெளியிட்டேன். இப்போது அண்ணு மலை வள்ளலின் சரித்திரத்தை எழுதி முடித்தேன். வள்ளலார் - வள்ளல் - ஆகிய இருவரின் சரித்திரத்தை எழுதும் பணிக்கு உள்ளாக நேர்ந்தது எனது பாக்கியமே.

ராஜா ஸர் சரிதத்தை நான் எழுத விரும்பியதற்கு மூன்று முக்கிய காரணங்கள் உண்டு:

1. நான் தென்னுற்காடு ஜில்லாவைத் தாயகமாகக் கொண்டவன். எனது ஜில்லாவில் பெருங் கலைக் கோவில் ஒன்றை ஏற்படுத்தியதற்குத் தென்னுற்காடு ஜில்லா மக்கள் சார்பாக, அண்ணுமலை வள்ளலுக்கு, இப் பணியின் மூலம் நான் நன்றி செலுத்திக் கொள்ளச் சந்தர்ப்பம் கிடைத்தது.

2. தமிழ் இசை மண்மேடிட்டு மறைந்து போகும் நிலைமையி லிருந்ததை, மீண்டும் கொப்பும் தளிருமாக வளரவும், கான - மலர் மழை பொழியவும் செய்த அண்ணுமலைப்

பெருந்தகையாருக்கு நான் வேறு எவ்விதம் எனது அன்பை அளிக்க முடியும்?

3. ஆலயப் பணியும், அறப் பணியுமே பிறவியின் பயன் என்று தொண்டு செய்து வரும் அண்ணாமலை வள்ளலுக்கு அறுபது ஆண்டு நிறைவு விழாவின் ஆனந்த நாளில் அடியேன் செய்யுந் தொண்டு வேறு உண்டோ? அறப்பணி அவர் கடன்; அவ் அறவோரை என் நாட்டவருக்கு வழி காட்டியாக எடுத்துக் காட்டுவது என் கடன்.

ஒரு வாரத்திற்கு முன்னர்தான் ஏற்பட்ட இவ்வெண்ணத்தைக் குறைவின்றி நிறை வேற்றப் போதிய காலமில்லாமையால், இப் புத்தகத்தில் எங்கேனும் ஏதேனும் பிழை கள் ஏற்பட்டிருந்தால், பொறுமையில் மிக்க தமிழன்பர்கள் பொறுத்துக்கொள்ள மாட்டார்களா என்ற துணிவுடன் இதை வெளியிடுகிறேன்.

குறுகிய கால அளவில், இவ்வளவு நல்ல முறையில் புத்தகத்தை வெளியிட முடிந்த தற்குக் காரணம் நண்பர் ப. ரா. அவர்களின் அன்பு மிக்க உதவியே என்று மட்டும் கூறி முடித்துக் கொள்கிறேன்.

ஆசிரியன்



செட்டிநாட்டு அரசரும், அரசியும்

(1935-ல் லண்டனுக்கு சென்றிருந்தபோது எடுத்த படம்)

# காஞடுகாத்தான்

"தள்ளாவிளேயுளுந் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு." —குறள்

தென்ஞட்டில் சென்னேப் பட்டினத்திற்குத் தெற்கே, சற்றேறக்குறைய முந்நூறு மைல்களுக் கப்பால், மாட மாளிகை கூட கோபுரங்களுடன் வான மண்டலத்தை அளவளாவிக் கொண்டிருக்கும் ஒரு குபேர பட்டணம்தான் **காஞடுகாத்தான்** எனக் குறிப்பிடப் படுகிறது. இவ்வூர் சற்றேறக் குறைய நான்கு மைல் சுற்றளவுள்ளது. இங்கு வாழும் ஜனங்களின் சௌகரியத்திற்காகப் பல நீர்த்தேக்கங்கள், சாலே வசதிகள், மின்சார நிலயங்களெல்லாம் செவ்வனே அமைக்கப்பட்டிருக்கின்றன. வைதிக தர்ம நெறிப்படி அமைந்துள்ள ஆலயங்கள்' பலவும் உண்டு. அவற்றில் தலே சிறந்தது **மீஞக்ஷி சொக்கலிங்கர் சிவாலயம்**. ஆரம்பத்தில் காஞடுகாத்தானே, இரண்டு பிரிவாகக்

கொண்டிருந்திருக்கிறுர்கள் அவ்வூர் வாசி கள். அதில் ஒன்று பழைய ஊர், மற் றென்று புது ஊர்.

இவ்விரண்டு ஊர்களும் சேர்ந்து செட்டி நாடு என்ற பெயருக்குள் அடங்கியிருக்கின் றன. செட்டிநாட்டிற்கு ஆதாரம் கானுடு காத்தான், ஆகையால் அதே பெயரையே இங்கு தலைப்பாகக் கொடுத்திருக்கிறேம்.

கானுடுகாத்தான் என்பதற்கு, பல பூஞ் சோலைகளுடன் பல நாடுகளைக் காப்பாற்றும் கருணை வள்ளல்கள் வாழும்படியான தலம் என்று கருத்துரை கொள்ளலாம் ; உலக சரித்திரத்தில் குறிப்பிடும்படியான பல தருமங்களைக் காப்பாற்றிவரும் தனிகர்கள் கானுடுகாத்தானில் வாழ்கிறுர்கள் என்பதை எவரும் மறுக்கமுடியாது. பெரும்பாலும் நகரத்தினர் என்ற செட்டியார்களே இங்கு சீரும் சிறப்பும் பெற்று வாழ்கிறுர்கள். தென் தேசத்தில் திருச்சிணுப்பள்ளிக்கடுத்த புதுக்கோட்டை சமஸ்தானத்தின் எல்லை யைத் தாண்டியவுடன், கானுடுகாத்தான் தான் முதல் பட்டணம். தென்னிந்திய இருப்புப் பாதையில் திருச்சி - மானு மதுரை குறுக்கு வழியில் கானுடுகாத்தான் என்ற நகர் செட்டிநாடு என்ற பெயருடன் விளங்குவதைக் காணலாம். ஸ்டேஷனைப் பார்த்தவுடன் தெரிந்துகொள்ள வேண்டு

மானுல், அதன் கீழ்புரத்தில் செட்டிநாடு அரச வம்சத்தினர் தங்கும் மாளிகை ஒன்று அற்புதத் தோற்றத்துடன் அமைந்திருப் பதைக் கண்டாலே போதும்.

## குபேர பட்டணம்

இனிய பொழில்கள், நெடிய வயல்க ளுடன் காட்சியளிக்கும் இவ்வூரில், தற்கால முற்கால நாகரிகத்தினராய், சிறப்புடன் வாழ்கிருர்கள் நகரத்தார். இந்நகரத்தின் கம்பீரத்தை நோக்கினுல், இது ஒரு குபேர பட்டணம் என்று சொல்லத் தோன்றும் நமக்கு. தமிழ் நாட்டிலுள்ள மிகச் சில சிறந்த தோற்றமளிக்கும் ஊர்களில் காரைடு காத்தானும் ஒன்று. மின்சார நிலயங்கள், வைத்திய சாலேகள், தபால் நிலயம், பல வர்த்தகசாலேகளின் தலேமை ஸ்தாபனங்கள், ரயில் நிலயம், பொது வியாபார ஸ்தலம், பாங்குகள் முதலியவைகளுடன் விளங்கும் இவ்வூரை, ஜன சௌகரியங்கள் நிறைந்த நல்ல ஊர் என்றே சொல்ல வேண்டும்.

இவ்வூரில்தான் ராஜா ஸர் அண்ணுமலேச் செட்டியாரும், அவர்கள் சந்ததியார்களும் வாழ்கிருர்கள். அவர்களது சரித்திரத்தைத் தொடங்கு முன், அவர்களது ஊரைக் குறித் தும், வகுப்புப் பெருமை முதலியவைகளைக் குறித்தும் எழுத வேண்டியது அவசிய

மாகையால், அதற்காகக் கானாடுகாத்தானைப் பற்றி முதலில் குறிப்பிட்டிருக்கிறோம்.

## பிறப்புத்தலம்

வள்ளல் ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார், தொண்ணூற்றாரூர் நகரத்தார்கள் என்று சொல்லப்படும் நகரத்துச் செட்டியார்கள் வம்சத்தைச் சேர்ந்தவர். நகரத்தார்கள், சுற்றமும் துணையுமாக, தென்னாட்டின் முக்கியமான இருஜில்லாக்களாகிய ராமநாத புரம், மதுரை ஜில்லாக்களில் வாழ்பவர்கள். இந்த ஜில்லாக்களில் நகரத்துச் செட்டியார்களே எல்லாச் சிறப்பும் பெற்று வாழ்கிறார்கள். இவர்களது சிறப்புக்குக் காரணம் இனி அடுத்துவரும் அத்தியாயங்களில் விளக்கிக் கூறப்பட்டிருக்கிறதைக் காணலாம். உலகம் உள்ள அளவும் மறவாதிருக்கும்படியாகப் பல்வேறு தர்மங்களை நாடெங்கும் பரவச்செய்து கலியுகக் கன்னனென்ற பெயர்கொண்ட உயர் திரு ராஜா ஸர் அவர்களின் பிறப்புத் தலமாக விளங்கும் பதி கானாடுகாத்தான் என்னும் திருப் பதியே. இப்புகழ்பெற்ற நகரம், உலக மேதாவிகளில் ஒருவராகிய டாக்டர் ராஜா ஸர் அண்ணாமலை யென்ற வள்ளலை அளித்துள்ள தால், இதுவும் உலக நகரங்களில் ஒரு முக்யத்துவம் அடைந்துள்ளது.

## நகரத்தார்கள்

"தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தாற் காணப்படும்." — குறள்

நகரத்தார் 'தொண்ணூற்றூர் பரம்பரைகள்' என்றும், செட்டியார்கள் என்றும், நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் என்றும் தங்களை அழைத்துக்கொள்ளுகிறார்கள். இவர்களிலே, எத்தனையோ வகைப் பெயர்களைக் கொண்ட பிரிவினர்கள் உண்டாகையால், இந்தத் தொண்ணூற்றூர்ப் பரம்பரைகள் மட்டும், தங்களை நாட்டுக்கோட்டையார்கள், நகரத்தார் கள், தனவணிகர்கள் என்ற இந்த முப்பெரும் பெயர்களால் மட்டும் குறிப்பிடுவதையே விரும்புகிறார்கள். வாணிபம் செய்து பொரு ளீட்டல் என்பது இவர்களுடைய குல தர் மம். 'திரைகடலோடியுந் திரவியந் தேடு' என்ற ஔவையின் வாக்கைக் கடைப்பிடித் தொழுகுவோரும் தனவணிகர்கள்தான்.

தனவணிகர்களுக்குப் பொருளீட்டலில் மட்டுமின்றி, தான தருமங்கள் செய்வதிலும் பேரார்வமுண்டு. தென்னாட்டிலே, எங்கு பார்த்தாலும், கலாசாலைகள், தர்மசாலைகள்

தேவாலயங்கள், புத்தகாலயங்கள், மருத்துவச் சாலைகள், நிரம்பியிருப்பதற்குக் காரணமும் பலவகையிலும் இவர்களே. இவர்களால், தமிழர்களின் சித்திர, சிற்பக் கலைகளும், பழம் பெருமைகளும் குன்றா நிலையாய்த் திகழ்வதையும் நாம் நம்முடைய தலைமுறையிலேயே காண்கிறோம். நகரத்தார்களில் பெரும்பாலானவர்கள் சைவ சமயிகள். 'சிவனடியார்கள்' என்ற தெய்வத் தன்மை வாய்ந்த சிறப்புப் பெயரைத் தங்களில் ஒவ்வொருவரும் பெற்றிருக்கவேண்டுமென்பதில் தனவணிக சமூகத்தவருக்கு மட்டில்லாத ஆசை யிருக்கிறது. அவ்வாசையின் பிரதிபிம்பமே தென்னாட்டுச் சிவன் கோவில்களும், அவற்றிற்கென்று நடைபெறும் பணியும், பிறவும் என்று சுருங்கச் சொல்லிவிடலாம். சிவப் பெயர் பொலிவுறப் பெயர் வைத்துக்கொள்வதில், இச்சமூகத்தினருக்குத் தனி ஆர்வமுண்டு.

### தொண்ணூற்று ஆறு ஊர்

தென்னாட்டின் சிவத் தொண்டுகளும் சிவாலயமும் பெரும்பாலும் நகரத்துப் புதல்வர்கள் செய்த அறப்பணியேயாம். இப்பொழுது தமிழ் நாட்டில் இவர்கள் எத்தனை ஊர்களில் வசிக்கிறார்கள் என்பதைக் கணக்குப் பார்க்க முடியுமென்றாலும், ஆதியில்

மொத்தம் தொண்ணூற்று ஆறு ஊர்களில் மட்டுந்தான் இவர்கள் வசித்தார்களாம். அதனாலேயே இவர்களைத் 'தொண்ணூற்றூரர்' என்றும் குறிக்கப்படுகிறதாம். பல நிர்ண யங்களும், கட்டுப்பாடுகளும், ஒற்றுமையும் நிறைந்த இச் சமூகத்தினர் தங்கள் நன்மை தின்மைகளுக்கென்று ஏதாவது சட்ட திட் டங்கள் நிர்மாணிக்க வேண்டுமென்றால், இன் னுங்கூட, பழைய தொண்ணூற்றாறு ஊர் களுக்கும் தாக்கீதுகள் அனுப்பி, எல்லோ ரும் ஒன்றுசேர்ந்த பின்னர்தான் விவகார மும் பேசப்படும். செட்டிமார் நாட்டுப் பகுதி யில், காரைக்குடி என்ற நகரின் சமீபத்தி லுள்ள **கோவிலூர்** என்ற ஊரில் பெரிய தொரு சமூகக் கூட்டம் நடத்துவ துண்டு. பொதுவான எல்லாக் காரியங்களும் இந் தத் தொண்ணூற்றூரர்க் கூட்டத்திலேயே முடிவு பெறும். இத் தொண்ணூற்றாறு ஊரார் வாழும் இடங்களே கானாடுகாத் தான், காரைக்குடி, தேவகோட்டை என் னும் திருப்பெயர்கள் கொண்ட பெரு நகரங்கள். பொதுவாக அவைகளைச் செட்டி மார் நாடு என்று கூறுவதும் உண்டு.

**சா. ராம. மு. அ.**

**சா. ராம. மு. அ.** வீடு என்றால் செட்டி யார்களிலே, செட்டிமார் நாட்டிலே, அந்த

விலாசத்தையும், அதன் பெருமையை யும் அறியாதவர்களே இல்லை எனலாம். கானாடுகாத்தானில், சுமார் நூறு ஆண்டு களுக்கு முன்பு, ஒரு பெருஞ் செல்வர் இருந் தார். அவரது பெயர் திரு. சாத்தப்ப செட்டி யார்; அவரது குமாரர் பெயர் திரு. ராம நாதன் செட்டியார். அவர் காலத்திலேயே செட்டிமார் நாட்டுப் பகுதியில் அவர்களைப் பற்றி மிகப் பெருமையாய்ப் பேசப்படும் கதைகள் பல உண்டு. ஊரில் ஏதாவது நன்மை தின்மைகள் நடைபெற்றால், 'சா. ராம. வீட்டிலிருந்து பெருமை வந்ததா?' என்று ஒருவருக் கொருவர் கேட்டுக்கொள் வார்களாம்! சா. ராம. வீடு என்றால் அப் பொழுதிலிருந்தே அவ்வளவு மரியாதை இருந்திருக்கிறது!

திரு. ராமநாதன் செட்டியாரின் ஒரே ஒரு தவப் புதல்வர் திரு. முத்தையா செட்டி யார் அவர்கள். சா. ராம. பரம்பரையில் வந்த அவர், பிறவிச் செல்வரல்லவா? அச் செல்வத்துடன் அவருக்கு எல்லாச் செல் வங்களுமே நிறைந்திருந்தன எனலாம். அவ ரது துணைவியார் திருமதி மீனாட்சி ஆச்சி யவர்கள். திரு. முத்தையா அவர்களுக்கு மூன்று புத்திர ரத்தினங்கள். அவர்களில் முதல்வர் திரு. சிதம்பரம் செட்டியார்; இரண்டாமவர் திரு. ராமசாமிச் செட்டி

யார்; மூன்றுமவர் இன்று புகழுக்கு மேல் புகழ்பெற்றுத் திகழும் டாக்டர் ராஜா ஸர் அண்ணுமலைச் செட்டியார் Kt., LL.D., M.L.A. (Central) அவர்கள். இந்த வரலாற்றிலிருந்து, சா. ராம. மு. அ. என்ற இத் தலைப்பின் பொருளை நன்கு தெரிந்துகொள்ளலாம். உயர் திரு. முத்தையா செட்டியார் அவர்களின் புத்திரர் மூவரில் முதல்வர் வழிக்கு சா. ராம. மு. சித. என்றும், இரண்டாமவர் வழிக்கு சா. ராம. மு. ராம. என்றும், மூன்றுமவர் வழிக்கு சா. ராம. மு. அ. என்றும், விலாசங்கள் உண்டு. கடைசி விலாசத்தையே சிலர் மு. அ. என்றும் குறிப்பிடுகிறுர்கள். நீண்ட விலாசங்களை உச்சரிக்கும் சிரமங் கருதி ஜனங்கள், பெரும்பாலும், மு. அ. என்றே குறிப்பிடுகின்றனர். தமிழ் நாட்டில், அதுவும் செட்டிமார் நாட்டில் மு. அ. என்றுல் தெரிந்துகொள்ளாதவர் யாருமிருக்க முடியாது.



## திரு. முத்தையாவின் திருப்பணிகள்

" அறத்தான் வருவதே யின்பம், மற்றெல்லாம்
புறத்த புகழு மில." — குறள்

சிவபக்தியில் செட்டிமார் சமூகத்திற்குள்ள பேரார்வத்தை முதலில் குறிப்பிட்டிருக்கிறது போலவே, திரு. முத்தையா செட்டியாரவர்களும் (ராஜா ஸர் பிதா), தம் காலத்தே, தில்லைச் சிதம்பரத்தில் பல திருப்பணிகளைச் செய்து வைத்திருக்கிறார். சிதம்பரத்தில் அன்ன சத்திரம், பசு மடம், தேவாரப் பாடசாலை, நந்தவனம், வேத பாடசாலை முதலியவைகள் அமைத்து, அவைகள் என்றும் நடைபெற்று வரும்படியான ஏற்பாடுகளையும் செய்திருக்கிறார். அவற்றை நாம் இன்றும் காணலாம்.

பண்டைக் கால வாஞ்சி யென்னும் கரூர் தலத்தில் உள்ள சிவாலயத்தையும், குளத்தையும் புதுப்பித்து, வடக்கே காசியில் மடமொன்றும் ஸ்தாபித்தார்.

திரு. முத்தையா செட்டியாரவர்கள், தம் காலத்தில், செட்டிமார் நாட்டிற்கு ஒரு

திலகமாகவும், நல்ல செல்வாக்குடனும் விளங்கினர். அப்பக்கத்தில் அவர் பேச்சுக்கு மறு பேச்சே கிடையா தென்று கூறுகின் றனர்.

### வள்ளலின் பிறப்பும் வளர்ப்பும்

இது விஷு வருஷம். இப்புத்தகம் வாசகர்களுக்குக் கிடைப்பது ஒரு சஷ்டியப்த பூர்த்தி தினத்தில். சஷ்டியப்த பூர்த்தி என்பது வடமொழி. இதனை அறுபது ஆண்டு நிறைந்த ஆனந்த நாள் என்று அறிஞர்கள் கூறுவார்கள். இந்த விஷு வருஷம் சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கவேண்டிய நல் வருடமாகும். ஏன்?

இன்றைக்கு அறுபது ஆண்டுகட்கு முன் அதாவது, சென்ற விஷு வருஷம் புரட்டாசி மாதம் 16-ந்தேதிதான் (30-9-1881) பிறந்தார் ராஜா ஸர் அண்ணுமலேச் செட்டியார்.

குழந்தையாக இருக்கும் பொழுதே பெருந்தன்மையான குணமும், உற்சாகம் நிறைந்த போக்கும், கருணை நிறைந்த உள்ளமும் அவருக்கு உண்டாம். பணக்காரச் செல்வர்களுக்கு இம்மாதிரியான குணங்கள் இயற்கையிலேயே உண்டாகு மென்ருலும், எதிலுமே சுறுசுறுப்பும் ஆழ்ந்த கருத்துங் காட்டுவது குழந்தை அண்ணுமலையிடம் அளவுக்கு மீறிக் காணப்பட்டதாம். 'இளே

யது காளை' என்பதுபோல, அவர் தமது இளவயதிலேயே புத்தியும் யுக்தியும் மிகுந்து காணப்பட்டாராம். சீரும் சிறப்பும் மிக்க தாய் தந்தையர்கள் அவரிடத்துக் காட்டி வந்த பேரன்போடு, அவர், அறிவு மிக்க ஒரு குபேரக் குழந்தையாகவே வளர்ந்து வந்தா ராம். பிற்காலப் பெரு வாழ்விற்கு, முற்காலத் திய வாழ்க்கைப் படியே நமது அண்ணாமலை யைக் கொணர்ந்து விட்டதென்பது அனு பவம்.

## ஒரு சம்பவம்

பெற்றோர்கள் குழந்தையை மிகவும் ஜாக்கிரதையாக வளர்த்தனர். ஏனென்றால், இக்குழந்தை பாலப் பருவத்திலேயே எல்லா வற்றிலும் முதன்மை பெறவேண்டும் என் பதுபோலத் தன் காரியங்களைக் குறைவறச் செய்து வந்ததில், தாய் தந்தையர் மிக்க கவ னம் செலுத்த வேண்டியிருந்தது. அண்ணா மலையாருக்கு நான்கு வயது நிறையும் பொழுது, பெற்றோர்கள், தமது குழந்தை களுள் மூத்தவரைமட்டும் உடனழைத்துக் கொண்டு, மற்ற இருவரையும் ஜாக்கிரதை யாய்ப் பார்த்துக்கொள்ளும்படி வேலைக் காரர்களிடம் திட்டம் செய்துவிட்டு, ஒரு பெரிய சிவ ஸ்தல யாத்திரையைத் தொடங் கினராம். இவ் விஷயம் நம் அண்ணாமலைக்

குத் தெரியவே, அவர் பிடிவாதம் செய்யத் தொடங்கினராம். தாமும் அவர்களுடன் வரப்போவதாயும், தம்மையும் அழைத்துக் கொண்டுதான் அவர்கள் யாத்திரைக்குப் போகவேண்டுமென்றும் அவர் பிடிவாதம் செய்தாராம். இந்தப் பிடிவாதத்தைப் போக்கப் பெற்றோர்கள் முயன்றும் முடியாது போகவே, முடிவில் அண்ணுமலையையும் அழைத்துக் கொண்டே யாத்திரை போவதென்ற முடிவுக்கு வரவேண்டியதாயிற்ரும்.

இந்த மாதிரி நல்ல காரியத்தில் பிடிவாதத்துடன் தம் வேலைகளைச் செய்து வரும் குணம் மிகவும் சிறு வயதிலேயே அவரிடம் காணப்பட்டதினுல், இன்றும் அவர், தாம் நினைத்தபடியே பல நல்ல காரியங்களையும் பிடிவாதமாகச் செய்து முடிப்பதை நாம் பார்க்கிறோம். இதைத்தான் நமது நாட்டிலே, 'விளையும் பயிர் முளையிலே' என்று உபமானமாகக்கூடச் சொல்லுகிருர்கள். அண்ணுமலையின் குழந்தைப் பருவத்துப் பிடிவாதக் கதையைக் கேள்விப்படுகிறவர்களும் அவர் விஷயத்தில் 'விளையும் பயிர் முளையிலே தெரிந்தது' என்று தாராளமாய் ஒப்புக் கொள்ளலாமல்லவா!

## கல்வி

"எண்ணு மெழுத்தும் கண்ணெனத் தகும்."

— ஔவை

ஏழாவது வருடத்தில் பல வைபவங்களுடன் அவருக்குக் கல்வி ஆரம்பம் செய்து வைக்கப்பட்டது. அந்நாளிலிருந்து அண்ணுமலை கல்வியில் மிகவும் கவனம் செலுத்திஞர். எவ்விதம்? 'பள்ளிப் படிப்பு புள்ளிக்கு உதவாது' என்று கருதியோ என்னவோ, தமது வர்த்தகத் தொழிற் கல்வியை வீட்டிலேயே கற்ருர்.

இன்று உலகம் புகழும் ராஜா ஸர் அவர்கள் பல பெரிய கலாசாலைகளில்தான் படித்திருக்க வேண்டும், எனப் பலர் எண்ணுவார்கள். உலக மேதாவிகளில் ஒருவராக விளங்கும் டாக்டர் ராஜா ஸர் அவர்களின் திறமையையும், கல்வி அறிவு, பாஷா ஞானம், காரிய சூட்சுமம், வாக்குச் சாதுரியம் முதலியவைகளையும் பார்த்தவர்கள், அவர் பல வருஷ காலம், பல உயரிய கலாசாலைகளில் கல்வி பயின்றிருப்பார், என்று நினைப்பது சகஜம். ஆனல் நாம் எண்ணுவதற்கு எதிர் மாருக

விஷயங்கள் நடந்தேறி யிருக்கின்றன. அவர் படித்ததெல்லாம் தம் இல்லத்திலேயே தான்.

இதற்கு ஓர் உதாரணத்தை மட்டும் பாருங்கள்! ராஜா ஸர் அவர்கள், 1920-ம் ஆண்டில் 'கவுன்ஸில் ஆப் ஸ்டேட்' தேர்த லுக்கு அபேட்சகராக நின்று, பல முனிசிபல் சபை சேர்மன்களுக்கும், வைஸ் சேர்மன் களுக்கும் தம்மை ஆதரிக்கும்படி கடிதம் எழுதினுர். அச்சமயம் ஒருநாள் ஒருவரிட மிருந்து கடிதம் ஒன்று வந்தது. அதைப் படித்துப் பார்த்ததும், அபேட்சகர் அண்ணு மலே, வாய்விட்டுச் சிரித்தார். அருகிலிருந்த சிலர் என்ன விசேஷமோ என்று ஆச்சரியப் பட்டனர். "என்னுடைய கலாசாலேத்தோழர் என்று கூறிக்கொண்டு ஒருவர் கடிதம் எழுதியிருக்கிருர். இது பெரும் ஆச்சரிய மாக இருக்கின்றதே — கலேசாலேயில் நான் படிக்கவே இல்லேயே. எனக்கேது கலாசாலே நண்பன்?" என்று கூறிச் சிரித்தார்.

உண்மை யென்னவெனில், ராஜா அவர் கள், சிறிய வயதில், கரூரில் இருந்த ஒரு சின் னப் பள்ளிக்கூடத்தில் 3-வது வகுப்பில் ஆறு மாத காலமே படித்தார். வாசகர்கட்கு ஒரு சந்தேகம் ஏற்படலாம். கலாசாலேக்குச் செல் லாத இத்தகைய மேதாவிக்கு, எங்ஙனம் அரசியல் நுட்பமும், வியாபாரத் திறமை

யும், பேச்சு வன்மையும், ரத்தினச் சுருக்க மான எழுத்து வன்மையும், பொருளாதாரம், நாணயமாற்றுத் திட்டங்கள் முதலிய வைகளில் சிறந்த ஞானமும், பரந்த அறிவும் எவ்விதம் ஏற்பட்டன? என்ற ஐயம் எழலாம். தந்தையே குருவாக இருந்து கற்பித்த இல்லப் படிப்பும், இயற்கையா கவே அப்பெரியாருக்கு இருந்த சூட்சும அறிவும் கலந்து மிளிர்ந்ததின் பலனே, அவரை ஓதாதுணர்ந்த மூர்த்தியாகவும், உய ரிய பல்-கலை-வல்ல விற்பன்னராகவும் செய்து விட்டது. (இவ்விஷயத்தில் இராம லிங்க வள்ளலாருக்கும் அண்ணாமலை வள்ள லாருக்கும் ஒற்றுமை காணப்படுகிறது.)

**தந்தையின் அன்பு**

தந்தை முத்தையா அவர்கள் கிழித்த கோட்டைத் தாண்டாது, வைதிக நெறிப் படி கல்விகற்று வந்தார் அண்ணாமலையார். தமிழ்க் கல்வியிலும் கணக்கிலும் மிகவும் ஞானஸ்தராகவும் சுறுசுறுப் புள்ளவராக வும் இருத்தலைக் கண்ட அவருடைய தந் தையார், மற்ற இரு புதல்வர்களிடம் வைத் துள்ள அன்பின் அளவைவிட, இவர்பால் அதிக அன்பும், ஆர்வமும் வைத்திருந்தன ராம். இயற்கைதானே!

15-வது வயதிலிருந்தே அண்ணாமலை இளவல், தந்தையாருக்கு உதவியாகக் கணக்

கெழுதுதலும், வியாபார விஷயங்களைக் கவ னிப்பது முண்டாம். நல்ல ஞாபக சக்தி யுடன் வியாபார சம்பந்தமான கடிதங்களைத் தாமே தெளிவாகவும், சுருக்கமாகவும் எழுது வாராம். பல ஊர்களிலும், கடல் கடந்த ஊர்களிலும் பரவியிருக்கும் தங்களுடைய வியாபார ஸ்தலங்கட்கு தினசரி 40 கடிதங் கட்கு மேல் எழுதுவாராம். தந்தையாரோ இது கண்டு பெரு மகிழ்ச்சி கொள்வாராம்.

அண்ணுமலையாருக்குத் தமிழில் ஆற்ற லும், ஆங்கிலத்தில் ஆர்வமும் உண்டு. சுத்த மாகவும், சுலபமான வார்த்தைகளாகவும் உச்சரிப்பார். வியாபார நிமித்தம், ஹிந்துஸ் தானியும் கற்றுக்கொண்டார். ஆனுல் ஹிந்துஸ்தானியின்மீது அவருக்கு எவ்வளவு பற்றுதல் உண்டு என்பதை எம்மால் கண்டு பிடிக்க முடியவில்லை. பர்மிய, மலேய, சிங் கள பாஷைகளிலும் அவருக்குப் பரிச்சய முண்டாம்.

செட்டிமார் தேசத்தில் இக்காலத்தில் கல்வித் துறையில் கவனம் செலுத்துவது போல் அக்காலத்தில் செலுத்திய தில்லை. பெரும்பாலான தனவணிகர்கள் தென் ஞட்டை விட்டுக் கடல் கடந்த சீமைகளுக் குச் சென்று, பொருளீட்டுந் துறையில் இள வயதிலேயே தங்கள் செல்வர்களைப் புகுத்தி விடுவதால், அவர்களில் பெரும்பாலோர்

ஆரம்பக் கல்வியுடனேயே தங்கள் படிப்பை முடித்துக் கொண்டு விடுவது வழக்கமாக இருந்து வந்தது. வரவர அந்நிலைமை மாறி உலக நிலையை யறிந்து, நகரத்தார், தங்கள் பிள்ளைகட்கு உயரிய கல்வி அறிவைக் கற்கச்செய்து, வேறிடங்களுக்கு வியாபார சம்பந்தமாகவோ உத்தியோக சம்பந்தமாகவோ அனுப்பி வைக்கின்றார்கள். இந்நிலைமைக்குப் பெரிதும் காரணஸ்தராக இருந்தவர் நமது ராஜா ஸர் அண்ணாமலை அவர்கள்தான் என்பது மிகையாகாது. பொதுவாகத் தென்னாட்டிலுள்ள மக்கள் ஒவ்வொருவரும்,குறிப்பாக நகரத்தார்களும், கலைவல்லுனர்களாக இருக்கவேண்டுமென்ற பேராவல் ராஜா ஸர் அவர்களுக்கு எப்போதும் உண்டு. அந்த ஆவலின் பிரதிபிம்பமே அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.



## திருமணம்

“இல்வாழ்வா னென்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.” — குறள்

அறிவில் மிக்க இளைஞர் அண்ணாமலைக்குத் திருமணம் செய்துவைத்துப் பார்க்க வேண்டுமென்பது தந்தை முத்தையாவின் எண்ணம். புகழும் பொருளுமுடைய இக் குடும்பத்துடன் சம்பந்தம் செய்துகொள்ளப் பல நகரப் பிரபுக்கள் முயன்றதுண்டு. அவனருள் இருந்தபடி, பழம் பெருங் குடும்பமான பள்ளத்தூர் திரு. பழனியப்ப செட்டியாருக்கும், திருமதி உண்ணாமலை ஆச்சிக்கும் தவமணியாகப் பிறந்து வளர்ந்த திருமதி சீதை ஆச்சி என்னும் குலமணியை வள்ளலின் இல்லறத் துணைவி யாக்கினர். அப்போது வள்ளலுக்கு வயது இரண்டு குறையப் பதினாறு என்று சொல்லப்படுகிறது.

குபேரபட்டணத்தில் இந்திரனுக்குத் திருமணம் நடந்தது போல், பல நாட்கள்,

சகலவித வைபவங்களுடன் திருமணம் நடந் தேறியது. செட்டிமார் நாடு முழுவதும் அத் திருமணத்தைக் கண்டு களிப்படைந்தனர்.

### தந்தையின் பிரிவு

"பிறந்தோர் யாவரும் பொன்னுலகு புகுதல் வேண்டும்" என்ற நியதியை அனு சரித்து, அண்ணுமலே வள்ளலின் பதினெட் டாவது வயதில் தந்தை திரு. முத்தையா வானுலகினருக்குச் சேவை செய்யச் சென் ருர். அக்குடும்பம் முழுமையும் ஆருத் துய ரடைந்தது.

### திரு. ராமசாமி செட்டியார்

தந்தையின் பிரிவுக்குப் பிறகு, குடும் பம், வியாபாரம் ஆகியவைகளே இளவல் அண்ணுமலே,மிகப்பொறுப்புடன் கவனித்து வந்தார். சுமார் பத்து வருட காலம் வெகு ஊக்கத்துடன் தந்தை விடுத்துச் சென்ற பலதுறைக் காரியங்களேயும், இளேஞர் அண் ணுமலே தமது திறமையினுல் கண்காணித்து, சீர் பெற வைத்தார்.

தமது குடும்பத்தினரும் தந்தையாரும் செய்து வந்த குலத்தொழிலாம் வாணிபத் தொழிலில் திரு. அண்ணுமலே அவர்கட்கு எப்பொழுதும் பற்றுதலும், ஆர்வமும் உண் டாம்.

ராஜா ஸர் அவர்கள் குடும்பத்தினர் தந்தை இறந்த பிறகு பாகம் பிரித்துக் கொண்டனர். திரு. அண்ணுமலை, செட்டிமார் நாட்டிலேயே தங்கிக் காரியங்களைப் பார்க்கவும், தமையனுரான திரு. ராமசாமி செட்டியார் சிதம்பரத்தைத் தமது இருப்பிடமாகக் கொண்டனர். அங்கு அவருடைய தந்தையார் ஏற்படுத்திய தருமங்களைக் கண்காணித்துக் கொண்டதுடன், தாமும் சில முக்கிய தருமங்களைச் செய்து வந்தார்.

சிதம்பரம் நகர சுகாதாரங்களும், ரஸ்தாக்களும் சீர்கேடடைந்திருப்பதைக் கண்டு, அந்த நகருக்கு மிக அவசியமான சில நன்மைகளைச் செய்யவேண்டுமென்று ஆர்வமுற்ருர். அவ்வூர் நகர பரிபாலனத் தலைவராகவும், தாலுகா போர்டுத் தலைவராகவும் இருந்து பணியாற்றினுர். அக்காலத்திலிருந்த மின்டோ-மார்லி சீர்திருத்தச் சட்ட சபையில், அவர் ஓர் அங்கத்தினராகவும் இருந்தார்.

குடி ஜல வசதியற்ற சிதம்பரத்திற்கு நன்னீர் கொண்டுவரவேண்டும் என்ற பரோபகாரச் சிந்தையுடன் சில ஏற்பாடுகளைச் செய்தார். இதற்கு ஆரம்பத்தில் அங்கே சில எதிர்ப்புக்களும் இருந்தனவாம்.

காவேரியின் துணை நதியான கொள்ளிடத்தில் வட ராஜ வாய்க்காலிலிருந்து தண்

ணீர் வரச் செய்து, அங்கு தேக்கிச் சுத்தம் செய்தபின் குழாய்களின் வழியாகத் தில்லைத் தெருக்களிலும், இல்லங்களிலும் தாராள மாகத் தண்ணீர் கிடைக்கும்படியான ஒரு பெரும் தொண்டைச் செய்து முடித்தார். அன்று கங்கையைக் கொண்டுவந்த பகீர தன் பிரயத்தனத்தையும், திரு. ராமசாமி செட்டியார் தில்லைக்குத் தண்ணீர்கொண்டு வந்ததையும் ஒரே நிலையில் வைத்துக் கூறலாம்.

வருடத்தில் இருமுறை சிதம்பரம் தரிசன உற்சவத்திற்காக அங்கு பல்லாயிரக் கணக் கான மக்கள் கூடுவார்கள். அவர்கள் தண் ணீர்ப் பஞ்சத்தால் துன்பப்படுவதுடன், ஜனக் கும்பல் சேர்ந்ததும் சுகாதாரக் கேடு கள் அதிகமாகி, காலரா, மலேரியா முதலிய வியாதிகள் சகஜமாய் அங்கு பெருகி விடுவ துண்டு. திரு. ராமசாமி செட்டியாரெனும் பெருந்தகையார் செய்த இத்தொண்டினுல், காலரா போன்ற வியாதிகள் அடியோடு வருவதில்லை! பல்லாயிரக் கணக்கான மக்க ளுக்கு உயிர்ப் பிச்சையளித்த புண்ணியமும் அவ்வுத்தமரையே சார்ந்ததாகும். திரு. ராமசாமி செட்டியார் தமிழ்ப் புலமை நிரம்பியவர். சொற்பொழிவு நிகழ்த்துவதில் வல்லவர். குறளாராய்ச்சி யுடையவர். செய்யு ளியற்றும் ஆற்றலுமுடையவர்.

## காரைக்குடி சேர்மன்

"காலைக் கதிர்சிந்து கிற்றூர்
கண் காட்சிகள், கூட்டங்கள் பந்தாடுசாலை."
— பாரதிதாஸன்

ராஜா அண்ணுமலை தமது குடும்பப் பொறுப்பைத் தாமே ஏற்றுக்கொண்டு அத்துடன் திரவியம் தேடும் வேலையையும் செய்தார்.

1910-ம் ஆண்டில் நமது வள்ளல் மேனுட்டிற்குச் சென்று அங்கு பல நாடுகளையும் சுற்றிப் பார்த்தார். அங்குள்ள கலாசாலைகள், கட்டிடங்கள், இதர சுகாதாரம், மக்களின் சுக வாழ்க்கை முதலியவைகளை அவர் காணுந்தோறும் 'நம் நாட்டிலும் இவ்விதம் இருத்தல் கூடாதா!' என அவர் ஏங்குவ துண்டாம். தாம் அங்கு கண்ட அநுபவங்களை அநுஷ்டானத்தில் கொண்டுவர எண்ணியிருக்கையில், அவர் திரும்பித் தனது நாடு வந்ததும், காரைக்குடி யூனியன் பஞ்சாயத்து போர்டு சேர்மன் பதவி பெற்ருர். அப்பதவியை ஒரு காரணமாய் வைத்

துக்கொண்டு நகர சுகாதாரம் முதலியவை கட்குப் பாடுபட்டார். தமது சொந்தப்பணத் தைக் கொண்டே பல்வேறு சவுகரியங் களும் அங்கு செய்தார். அப்பொழுது அதி காலையில் ஒருவர் பழைய கோச் வண்டியில் வெகு அடக்கமாய் உட்கார்ந்து கொண்டு கானுடுகாத்தானிலிருந்து காரைக்குடிக்குச் சென்று சுற்றி வருவார். அவர்தான் அந்நகர யூனியன் போர்டின் தலைவர் - தற்காலத்தில் தென்னுட்டின் தலைவராக விளங்கும் ராஜா.

பொதுநல இயக்கத்தில் ஈடுபட்ட பல ஞக, ஜில்லா போர்டு அங்கத்தினராகவும், சட்ட சபை அங்கத்தினராகவும் அவர் தேர்ந் தெடுக்கப்பட்டார். தொடர்ச்சியாக 3 தட வைகள் கவுன்ஸில்ஆப் ஸ்டேட்டில்இருந்து, தம் முயற்சியால் பெரும் பதவிகளையும் பட் டங்களையும், செல்வத்தையும் பெற்றுள்ள ராஜா ஸர் அவர்கட்குத் தென்னுட்டு மக்க ளைப் பொன்னுட்டு மக்களாகத் திகழவைக்க வேண்டு மென்பதே பெரும் சிந்தனையாக இருந்தது. இன்றும் அவ்வாறே இருப் பதையும் நாம் காணலாம்.

## தென்னுட்டு வள்ளல்

கடை எழு வள்ளல்கள் என்று தமிழகத் தில் முன்காலத்தில் பல தரும தாதாக்கள் இருந்திருப்பதாக நாம் கேள்விப்பட்டிருக்

கிறோம். அவர்களைக் குறித்த கதைகளை யெல்லாம் அறிந்திருக்கிறோம். ஒவ்வொரு நாளும் அவர்களையும் அவர்களுடைய தருமங்களையும் குறித்து ஆச்சரியமடையுங்கால், நமது கண்களுக்குமுன், நமது காலத்திலேயே ஒரு பெருந் தரும தாதா இருப்பதும் தெரிகிறது. அவர்தான் **வள்ளல் அண்ணுமலை!**

'திரைகடலோடியுந் திரவியந் தேடு' என்ற மறை வாக்கைக் கடைப் பிடித்தொழுகி, பெருஞ் செல்வத் தலைவரான அவர், தமது செல்வங்களை உலக உபகாரத்துக்காக அளிக்கும் துறையிலும் தமது கவனத்தைச் செலுத்தினுர். அப்படிக் கவனத்தைச்செலுத்தி அவர் செய்த தருமங்கள் உலகப்பிரசித்தி பெற்றவையாகும். என்றும் நிலைத்திருக்கத் தக்க, சாகா வரம் பெற்றவைகள் என்றுகூடச் சொல்லலாம். அவர் செய்த தருமங்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அவற்றில் ஒன்று இக தருமம், மற்றொன்று பர தருமமாகும்.

**"கொடுக்கும் கரங்களே, வாங்கும் தரத்தினையடைகின்றன"** என்று இயேசுநாதர் கூறியிருக்கிறுரல்லவா? அதைப் போலவே ராஜா அவர்கள் இகத்தில் பல தருமங்களைச் செய்திருப்பதால், தமிழ் மக்களின் உள்ளக்கோயிலில் நின்று நிலவுகிறுர். தில்லையில் ராஜாவின் தந்தையார் நடத்திவந்த அன்னதானத்

துடன், தில்லை மூவாயிரவர்களுக்குத் தினம் இரண்டு தடவை அன்னதானம் நடை பெறச் செய்திருக்கிறார். ராஜா அவர்கள், தில்லைமா நகரில் ஸ்ரீ. கோவிந்த ராஜர் சந்நி தானத்தை மூன்றுலட்ச ரூபாய்கள் செலவிட்டுத் திருப்பணியும் செய்து, பவ வருஷம் வைகாசி மாதம் 11-ந்தேதி (24-5-1934) அன்று கும்பாபிஷேகம் நடத்தி வைத்தார். இது மிக அவசியமான ஒரு காரியம்.

ராமனுதபுரம் ஜில்லாவிலிருக்கும் இளை யாத்தங்குடி என்ற ஊரிலுள்ள தமது குல தெய்வத்தின் கோவிலையும் சென்ற விக்கிரம வருடம் புதுப்பித்துக் கும்பாபிஷேகம் நடை பெறச் செய்திருக்கிறார்.

## பேதமற்ற தருமம்

இத்துடன், தமது முன்னோர்களால் தில்லையில் நடத்திவரப்பட்ட எல்லாத் தரு மங்களையும் குறைவின்றி இன்றும் நடத்தி வருவதுடன், பெருமாள் கோவில் திருப் பணியும் செய்து வைத்திருக்கிறார். இதி லிருந்து ராஜா அவர்களுக்குச் சைவப் பற்று மட்டுமின்றி, வைஷ்ணவப் பற்றும் இருக் கிற தென்பதை யறியலாம்.

இம்மாதிரி, பேதா பேதமற்ற, சமயப்பற் றுதலுள்ள தர்மவான்களை இந்த யுகத்தில், பார்ப்பதே அரிதாயிருக்கும்போதும், கடந்த

காலத்தில்கூட ஏதாவதொரு சமயத்தின் சார்புபற்றியே தருமங்களை நடத்தி வந்திருக்கும் தருமப் பெரியார்களை நோக்கும் போதும், எச்சார்பு மற்ற பரோபகாரியான தரும ராஜா அண்ணுமலையை, எல்லாரினும் மேம்பட்ட தென்னுட்டு வள்ளல் என்றுதான் குறிப்பிடத் தோன்றும்! பண்டைக் காலத்திய தமிழ் மன்னர்களின் தருமங்களைச் சரித்திரம் நமக்கு இன்றைக்கும் ஞாபகமூட்டி வருவதுபோல, அண்ணுமலையின் தேவாலய தருமங்களும் வித்தியா தானங்களும், எக்காலத்திலும் நிலைத்திருக்கப் போகின்றன. பிற்காலத்து மக்களுங்கூட இவற்றைப் போற்றிப் புகழ்வார்களென்பதற்குச் சான்று, நமது பழய மன்னர்களின் தருமங்களை நாம் போற்றுவதுதான். இவற்றைப் பர தர்மங்களென்று சொல்வதில் தப்பிதமில்லை யல்லவா? ராஜா ஸர் அவர்களின் தருமங்கள் இன்று நாளை மறைவதல்ல; சூரிய சந்திரர் உள்ளவரை நீடூழி நிலைபெற்று விளங்கும் என்பதில் ஐயமில்லை.

## அண்ணாமலையும் சமூகத் தொண்டும்

"எல்லார்க்கும் கல்வி சுகாதாரம் வாய்ந்திடுக;
எல்லார்க்கும் நல்ல இதயம் பொருந்திடுக."
— பாரதிதாஸன்

சமூகத் தொண்டிலும் ராஜா அவர்களுக்கு எல்லையற்ற ஆர்வமுண்டு. மனித சமூகத்தில் ஆண்களைப் போலவே பெண்களும் முக்கியமானவர்கள் என்பதை, ராஜா மிக மிக நன்றாய் உணர்ந்திருக்கிறார். தமிழ் நாட்டில்அரசாங்கத்தாரால் நிறுவப்பட்டிருக்கும் வைத்தியசாலைகளைத் தவிர வேறு நல்லவைத்திய சாலைகளைப் பார்க்கவேண்டுமானால் **கானாடுகாத்தானில்தான்** பார்க்கலாம். அங்கு மூன்று லக்ஷ ரூபாய்களைச் செலவிட்டுப் பெண்கள் நலனுக்காகவும், குழந்தைகளைக் கவனிப்பதற்காகவும் பிரத்தியேகமான பிரஸவ வைத்தியசாலை ஒன்றையும் நிறுவியிருக்கிறார் ராஜா. அந்த வைத்தியசாலைக்கட்டிடம் 1916-ம் வருஷத்தில் அமைக்கப் பட்டது. அச்சமயம் சென்னைக் கவர்னராக இருந்த லார்ட் பெண்ட்லண்ட் துரை யவர்களால் அஸ்திவாரக் கல் நாட்டப்பெற்று, கட்டிட

வேலைகள் முடிந்தபின் 1925-ம் வருத்தில் சென்னைக் கவர்னராயிருந்த கோஷன் பிரபு அவர்களால் திறந்து வைக்கப் பட்டிருக் கிறது. அந்தக் கவர்னர்க ளிருவரும் ராஜா வின் பரோபகாரத்தையும், தர்மத்தையும் புகழ்ந்து பேசிய தன்மை உலகமே மெச்சும் படியானவை. இந்த வைத்தியசாலைத் தரும மானது தமிழ்ப் பெண்கள் உள்ளவரையும் அவர்களால், அவர்கள் வாழ்க்கைக்குச் செய் யப்பட்ட பேருதவியாகக் கருதிப் புகழப் படும். ராஜா அவர்கள் சமூகத்தின்பால் கொண்டிருந்த அபிமானத்தை விளக்கி வைக்கும் ஞாபகச் சின்னமாகவும் இது திகழ்கிறதென்று சொல்லத்தக்க நிலையி லிருக்கிறது. இதனுல் மனித சமூகமே ராஜாவின் பெருங் குணங்களைப் புகழ்ந்து கூறும்படியும், சமூக வாழ்வில் அவருக்குள்ள பற்றுதல்களையும், ஊக்கத்தையும், உள்ளன் பையும் போற்றும்படியாக நேரிடுகிறது.

### வெல்லிங்டன் க்ளப்

இதைத் தவிர, தென்னுட்டில் தமிழர் களின் தலைநகரான சென்னையிலே, சீர் திருத்த நோக்கங்களை வளர்க்கும் முயற்சி யுடனும், ஆண், பெண்களனைவரும் சரி சம மாக வாழும் முறையை உணர்த்துவது போலும் ஒரு ஸ்தாபனத்தை நிறுவியிருக்

கிறார். அதை ஆங்கிலத்தில் (The Wellingdon Club) தி வெல்லிங்டன் க்ளப் என்று அழைப்ப துண்டு. இந்த ஸ்தாபனத்தின் வளர்ச்சிக் கென்று இரண்டு லக்ஷ ரூபாய் தருமமாக அளித் திருக்கிறார் ராஜா. அம்மம்மா!......

இவைகளிலிருந்து நாம் தெரிந்துகொள்வ தென்னவென்றால், தருமங் கொடுத்தாலும் லட்சக் கணக்காய்க் கொடுக்கவேண்டும்; அதுவும் மிகமிகப் பிரயோசனமான காரியங் களுக்காகவும், அவசியமாகவும் செய்ய வேண்டும் என்று அவர் கருதி வந்திருப்ப தாகும். இம்மாதிரி லட்சக் கணக்கில் தருமஞ் செய்யும் எத்தனையோ தர்மவான் களைக் குறித்து பலதடவை கேட்டிருக் கிறோம். நேரில் கண்கூடாகப் பார்த்துக் கொண்டிருப்பது ராஜா அண்ணாமலை அவர் களைத்தான்! ஆம்! அண்ணாமலையின் தரு மங்களை முற்றிலும் அறிவதோ, எழுது வதோ கடினமாகத்தான் இருக்கிறது. ஏன்? வலது கை செய்யும் தருமம் இடது கை அறியப் படாது என்ற நீதியைப் பல தடவை ராஜா அவர்கள் கையாண்டிருக்கிறார்.

### நம் நாட்டின் கல்வி

சாதாரணமாகத் தருமம் செய்தவர்களைப் பற்றியெல்லாம் நாம் கேள்விப்படும்போது நமக்கு வியப்பு உண்டாவதே இல்லை. அதா

வது நம்முடைய காலத்தில்! அதுவும் தமிழ் நாட்டில்! ஏனென்ருல், தமிழ் நாட்டுக்கும், தருமம் செய்பவர்களது இருக்கைக்கும் அவ்வளவு தொடர்பிருந்திருக்கிற தென்றுதான் அதற்கு அர்த்தம்! பாரி என்ற வள்ளலே எடுத்துக்கொள்வோம். பிறரையும் எடுத்துக்கொள்வோம். உலகப் புகழ் பெறத்தக்க அப்பெருந்தகைமை யுடையவர்களது செய்கைகள் சரித்திரத்தோடேயே நின்றுவிட்டன. தற்போது நேரில் காணக்கூடிய காரண காரியங்கள் சரியாக இல்லே. மற்ற பழம் மன்னர்களென்ருலோ, தங்கள் தருமங்களேக் கோவில்களாகவும், குளங்களாகவும், பிற சிறிய வகைகளிலும் உருவகப் படுத்திவிட்டுப் போயிருக்கிருர்கள்.

இன்ப மொழி என்று கொண்டாடத் தக்க தமிழ் மொழிக்கென்றிருந்த எத்தனேயோ ஆயிரக்கணக்கான தமிழ் ஆலயங்களும் (சங்கங்கள்) எப்படி எப்படியோ மறைந்துபோயின! ஒன்றிரண்டாய், உயிர் வைத்துக் கொண்டிருக்கும் தமிழ் ஆலயங்களோ, சங்கங்களோ, இக்காலத்திலே வாழ்வுக்கும் உயிருக்குமாய்ப் போராடிக் கொண்டிருக்கின்றன. இவைகளேத் தவிர, பள்ளிக் கூடங்கள் என்ற பெயருக்கும், அரசாங்கம் தனது 'கடமை' என்பதற்காகவும் உலகப் பழிக்கஞ்சியும் நிறுவியிருக்கும் சில

கல்வி நிலையங்களே தமிழ் நாட்டில் உயி ருடன் இருந்து வருபவை. அவற்றை யெல்லாம் ஒதுக்கிவிட்டு நமது தேசத்தில் வாழ்ந்த-வாழ்ந்துவரும் - தருமவான்களால் ஏற்படுத்தப்பட்ட சில கல்வி நிலையங்களை யும் மிக மிகக் குறைந்த அளவிலேயே நாம் காணலாம்.

### கணக்கிட்டுப் பார்த்தால்

நம் தேச மக்களின் பெருக்கத்தையும், அவர்களுக்கென்று இருக்கும் கல்விச்சாலை களையும் கணக்கிட்டுப் பார்த்துவிட்டு, நமது நாட்டைக்காட்டிலும் மிகமிகச் சிறிய தேசங் களான அயல் நாடுகளின் மக்கள் பெருக்கத் தையும் அவர்களுக்கென்று அவரவர் தேசங் களில் நிறுவப்பட்டிருக்கும் கல்விச்சாலைகளை யும் கணக்கிட்டுப் பார்த்தால், உலக மக்க ளின் முன்னிலையில் நாம் அவமானப்பட்டுத் தலை குனிவதுடன், இந்தியாவின் கல்விச் சாலைகளைப் பற்றிய புள்ளி விபரமும் மிக மிகக் குறைவானதாகவே தோன்றும்— தோன்றுகிறது! இத்தகைய நிலையில், நம் காலத்தில் — அதுவும் தமிழ் நாட்டில் எல் லாக் கலைகளையும் பயிற்றுவிக்கும் சர்வகலா சங்கம் ஒன்றே ஒன்றுமட்டும்,அரசாங்கத்தா ரால் நிறுவப்பட்டிருந்தது. அரசாங்கத்தார் தான் சர்வகலா சங்கம் ஒன்றை நிறுவியிருந்

தார்களே தவிர தனிப்பட்ட எந்தத் தருமவான் களாலும் தமிழ் நாட்டில் ஒரு சர்வகலாசாலைகூட நிறுவப்படவில்லை. உயர்தரப் பள்ளிக்கூடங் களை மட்டும் சில தனவான்கள் நிறுவி, பேரும் புகழும் பெற்றதுடன் நின்றிருந்தார் கள். இந்நிலையில் அவர்களெல்லாம் செய் யாத ஒரு பெரிய காரியத்தை ராஜா ஸர் அண்ணாமலை வள்ளல் செய்தார். அதுவே இந்த உலகத்தில் அவர் செய்த மனித சமூகப் பெருந்தொண்டு. தனி மனிதர் ஒரு சர்வகலாசாலையை ஸ்தாபித்த பெருமையும், கீர்த்தியும் ராஜா ஸர் அவர்களைச் சார்ந்ததே.

**தென்னாட்டின் கலைக்கோயில்**

தில்லைமா நகரில் திரு. ராமசாமிச் செட் டியாரவர்கள் (ராஜா அண்ணாமலையாரின் மூத்த சகோதரர்) நிறுவியிருந்த ராமசாமி-கலாசாலையைக் குறித்து மேலே சொல்லப் பட்டிருக்கிறது. அத்துடன் 1920-ம்ஞு ஏப்ரல் மாதத்தில் ராஜா ஸர் அண்ணாமலை யவர்கள், தம்முடைய தாயாரின் பெயரால் **ஸ்ரீ மீனாக்ஷி கல்லூரி** என்ற ஒரு கலைக் கழ கத்தை முதன் முதலில் ஏற்படுத்தினார்கள். அந்தக் கழகம் மிகவும் உயரிய முறையில் நடைபெற்றுக்கொண்டிருக்கிற போதே, தில்லைக்கு மிகவும் சமீபத்தில் "காண்டாவன மெரித்த காளை" என்று போற்றப்படும் மகா

வீரனுன பார்த்தனுக்கு, பரமன் தனது ஒப் பற்ற பாசுபதாஸ்திரத்தை மனமுவந்து கொடுத்ததாகக் கூறப்படும் இடமான திரு வேட்களம்* என்ற இடத்தைத் தேர்ந் தெடுத்து, அங்கு சுமார் நூறு ஏக்கர் விஸ்தீரணமுள்ள இடத்தையும் வாங்கி, 1921-ம் வருஷத்திலேயே பிரம்மாண்டமான கட்டிடங்கள் கட்ட ஆரம்பம் செய்துவிட் டனர்.

இப்படி ஆரம்பிக்கப்பட்ட கட்டிட வேலேகள் 1923-லேயே முடிவு பெற்றுவிட் டதால், அதுமுதல் மீனுட்சி கல்லூரியின் வகுப்புக்களெல்லாம் திருவேட்களத்தில் முறையுடன் நடத்தப்பட்டன. கலேத் தொண்டில் மிக்காரான அண்ணுமலேயின் உதார குணத்திஞலும் இடைவிடாத பெரு முயற்சியினுலும் பல அறிஞர்கள் தேர்ந் தெடுக்கப்பட்டு ஸ்ரீ மீனுட்சி கல்லூரி 1926ம் வருடத்திற்குள்ளேயே இம் மாகாணத்தில் பெரும் புகழ் பெற்று, மாகாணத்தில் சிறந்துள்ள பல கல்லூரிகளிலும் ஒன்ருய் விளங்கிற்று. பல மேதாவிகள் பரிசோதித்து வியந்தனர்.

---

*" தாழ்தரு புன்சடையொன் றினேவாங்கித்
தண்மதியம் மயலே ததும்ப
வீழ்தரு கங்கை கரந்தார்
வேட்கள நன்னக ராரே "

— திருஞானசம்பந்தர்.

## பல்கலைக் கழகம்

“அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆலயம் பதினாயிரம் நாட்டல்
பின்னருள்ள தருமங்கள் யாவும்
பெயர்விளங்கி யொளிர நிறுத்தல்
அன்ன யாவினும் புண்ணியங் கோடி
ஆங்கோ ரேழைக் கெழுத் தறிவித்தல்.”

—பாரதியார்

தற்கால உலக நடவடிக்கைகளுக்கு ஆங்கிலக் கல்வியே பெரும்பாலும் துணையாக நிற்கின்றது என்ற கருத்துக்கொண்டு மீனாட்சி கல்லூரியும், ராமசாமி கலாசாலையும் நிறுவப்பட்டுவிட்டாலும், அவற்றுடன் அண்ணாமலையின் மனம் அமைதியா யிருக்கவில்லை. தமிழ்மொழிக்கு ஒன்றும், வடமொழிக்கு ஒன்றுமாக மற்றிரண்டு கல்லூரிகளையும் அவர் நிறுவினார். அக்கல்லூரிகளிலே தேர்ச்சி பெற்ற வேத பாராயணச் சிரோன்மணிகளும், தமிழ் வல்லுனர்களும் கிளம்பி, நாட்டில் கலைத்தொண்டுசெய்ய வேண்டுமென ராஜா அவர்கள் எண்ணினார். எண்ணிய எண்ணமதைக் காரியத்தில்

செய்தார். மீனுட்சி கலாசாலைக்குமட்டும் அண்ணுமலையின் வள்ளற் கரங்கள் பதினேழு லட்ச ரூபாய்களைக் கொடுத்தன. ஸ்ரீ மீனுட்சி ஆங்கிலக் கல்லூரி, மீனுட்சி தமிழ்க் கல்லூரி, மீனுட்சி ஆரியக் கல்லூரி என்ற மூன்று கல்லூரிகளாக இப்பொழுது இனிது நடைபெறுகின்றன.

இம்மாதிரியான நிலையில் உலகத்தவரைப் போலப் பெருந் தருமங்களைச் செய்ததுடன் ராஜாவின் மனம் திருப்தி கொள்ளவில்லை. தென்னிந்தியாவிலே இதுவரைக்கும் யாரும் செய்யாத ஒரு பெருந் தருமம், அதுவும் புனிதமான தருமம், வேறு ஏதாவதிருக்கிறதா வென்று ஆராய்ச்சி செய்து ஒரு சர்வகலாசாலையை நிறுவவேண்டுமென்று முடிவு செய்திருந்தார். இந்த முடிவு எவ்வளவு பெரிய முடிவென்பதை நினைக்கும் போதுதான் அவருடைய தரும குணங்களின் சிறப்பு விளங்குகிறது.

### கலைத்தொண்டு

சாதாரணமாக லௌகிக உலகத்தில், ஆயிரம் ரூபாயை ஒருவர் தருமம் செய்கிருரென்ருல் அது பெரிதினும் பெரிதாய்ப் புகழப்படுகிறது. இருபது லட்ச ரூபாய்களை, ஒருவர் மனமுவந்து தருமம் செய்ய முன் வருவதென்ருல், அது கலியுகப் பேரதிசயங்

களில்கூட ஒன்ருக விளங்கும்! அப்படிப் பட்ட அதிசயத்தைத் தான் செய்தார் அண்ணுமலை. பல்கலைக்கழகம் ஒன்று நிறுவ ஆர்வமுற்ருர். ஏக காலத்தில், தம் பெயரால் சகல கலைகளையும் போதிக்கத்தக்க கலைவாணி மந்திரமான சர்வகலா சங்கத்தை நிறுவ 20 லட்ச ரூபாய்களைக் கொடுத்தார் (மீனுட்சி கலாசாலைக் குதவிய 17 லட்சம் நீங்கலாக). இந்தப்பெரிய தருமத்தை அரசாங்கத்தார் பேரன்புடனும், மகிழ்வுடனும் ஏற்றுக்கொண்டதுடன் அதற்குச் சரியாகத் தாங்களும் 20 லட்ச ரூபாய்களை அளித்தனர். அதன் பலனுல் சிதம்பரத்திற்குச் சமீபத்தில் அண்ணுமலைப் பல்கலைக் கழகம் தோன்றிற்று. அதன் காரணமாகவே அரசாங்கத்தினர் 1929-ம் வருடத்தில் தங்களது முதல் சட்டமாக அண்ணுமலைப் பல்கலைக் கழகச் சட்டம் என்ற ஒரு சட்டத்தையும் எதிர்ப்பின்றி நிறைவேற்றி வைத்தனர். கலைத்தொண்டை எதிர்க்கும் மனிதர்கள் உலகத்தில் இருக்க முடியுமா? அரசாங்கத்தில் அவ்வமயம் அங்கத்தினராயிருந்த பிரதிநிதிகள் ஒவ்வொருவரும் பல்கலைக் கழகச் சட்டத்திற்குப் பேராதரவு நல்கித் தங்கள் நாட்டின் கௌரவத்தைக் காப்பாற்றினர். மேலும் அரசாங்கமும், அண்ணுமலையைப் பெரிதும் போற்றிப் பாராட்டியது, தமிழ்

நாட்டுச் சரித்திரத்தில் என்றும் அழியாத அத்தியாயமாயும், வருங்காலத் தருமவான்களை இத்தகைய சர்வகலாசாலைகள் அமைக்க ஒரு தூண்டுகோலாகவும் செய்து விட்டது. அண்ணுமலை வள்ளலின் இப்பெரும் கலைத்தொண்டையே நாம் சென்ற அத்தியாயத்தின் முடிவில் 'மனித சமுதாயப் பெருந்தொண்டு' என்று குறிப்பிட்டிருக்கிருேம்.

சர்வகலா சங்கம் என்ருல், எல்லாவிதக் கலைகளையும் அங்கு தெரிந்துகொள்ளும் வசதி யிருக்கவேண்டுமல்லவா? அதற்கென, பண்டிதர் மன்றம் (Oriental Training College), *1929*-ம் ஞூ மேமீ *11*உ ராஜாவிஞல் நிறுவப்பட்ட இசைக் கல்லூரி (Music College) முதலியன இச்சர்வ கலாசாலையில் சேர்த்தமைக்கப்பட்டன.

தமிழகத்தோர், 'கற்றது கைம்மண்ணளவு' என்றவரைக்குமே நிற்கக்கூடாது என்பதற்காக மேல்நாட்டு மொழி, கலைகள் யாவற்றையும் செவ்வனே அறிந்துகொள்ள, அவைகளில் தேர்ச்சிபெற உதவிய சர்வகலா சங்கத்துக்காகத் தமிழ்நாடே அவருக்கு நன்றி கூறுகிறது. ஆனுல் ராஜா அவர்கள் சர்வகலா சங்கத்தை நிறுவியதுடன் மட்டும் நிற்கவில்லை. அதன் அபிவிருத்திக்கு இன்னும் தொகை செலவழித்து வருகிருர்.

ராஜா அவர்கள், வியாபாரத்திலும், அர சியலிலும், கல்வியிலும் எவ்வளவு விற்பன் னரோ, அஃதேபோல் கட்டிடப் பிளான் களை அமைப்பதிலும், வரைவதிலும் நிபுணர். சர்வ கலாசாலை அமைப்பதற்குரிய நிலங்களை வாங்கியதும், கட்டிடம் அமைக்கவேண்டிய பிளானைத் தமது கையினாலேயே எழுதிக் கொடுத்தார். (இராமலிங்க வள்ளல் வட லூர் சபைக்கு பிளான் எழுதிக் கொடுத்தது போல்) மற்றும் நிபுணர்கள் பல்வேறுவித வகுப்புக்களுக்குத் திட்டம் அமைத்துக் கொடுத்தனர். ராஜா அவர்கள் நேரில் யிருந்தே கட்டிட வேலைகளைக் கவனித்து வந் தாராம். வெகு துரிதமான கால அளவில் கலாசாலையை அமைத்துக் கண் குளிரப் பார்க்கவேண்டுமென்று கருமமே கண்ணா யிருந்தார். ராஜா அவர்கட்கு உதவியாக மகாகனம் வி. எஸ். ஸ்ரீனிவாஸ சாஸ்திரியார், சர் கூர்ம வெங்கட்ட ரெட்டி நாயுடுகாரு (தற்சமயம் அண்ணாமலை யுனிவர்ஸிட்டியில் வைஸ் சான்ஸலாராக இருப்பவர்) திரு டி. ஆர். வெங்கடராம சாஸ்திரி முதலியவர் களும் இருந்து, பல்கலைக் கழகம் அமைக்க உதவி புரிந்தனர்.

## இரு கண்கள்

இந்தப் பல்கலைக் கழகம் ஒவ்வொரு

துறையிலும் முன்னேறி வந்து உலகப் புக ழையும், மக்கள் அபிமானத்தையும் பெற வேண்டுமென்ற காரணத்தால், அப்போ தைக்கப்போது ராஜா அவர்கள் மேலும் மேலும் பொருளுதவிகளைச் செய்து அண்ணு மலை நகர் என்ற அறமா நகரையும் உண் டாக்கி வருகிறுர். தென்னிந்தியாவிலேனும், மற்றுமுள்ள இடங்களிலேனும் 'அண்ணு மலை நகர்' என்று சொன்னுல், தில்லையம் பதித் தேவர் வாழும் திருப்பதிக்கு அருகில், தேஜோமயமாய்க் கலாதேவி அருட் கொலுவீற்றிருக்கும் தேவலோகம் என்று எல்லாருமே தெரிந்துகொண்டு விடுவார்கள். ராஜா ஸர் அண்ணுமலை, சர்வகலாசாலையின் புரோ-சான்ஸலராகவும், ஸ்தாபகராகவும் விளங்கி வருகிறுர்.

பல்கலைக் கழக வேலைகள் நடந்து வரு கையில், ராஜா அவர்கள் மலேயா முதலிய கடல்கடந்த நாடுகளுக்கு அவசரமாகச் சென்றிருக்கையில், அங்கு சிதம்பரம் நட ராஜப் பெருமானையும், அண்ணுமலைப் பல் கலைக் கழகத்தைப் பற்றியுமே சிந்தித்துக் கொண்டிருப்பாராம். தில்லையும் - திருவேட் களமும் ராஜா அவர்களின் இரு கண்க ளல்லவா? பல்கலைக் கழகம் ஆரம்பம்வரை ராஜா அவர்கட்குச் சரியான ஊணும் உறக் கமும் கிடையாதாம்.

ராஜா அவர்கள் கடல்கடந்து வந்ததும், பி. ஏ. வகுப்புக் கலாசாலை ஆரம்பிக்கப்பட்டது. கலாசாலை முற்றிலும் அமைப்பதற்குள், வகுப்பு வாதத் தொல்லைகளும், சுற்றுப் பக்கத்திலுள்ள கிராமத்தினர் சிலர் தொந்தரவும், அதிகாரிகள் சிலர் பராமுகமும் ஏற்பட்டன. வள்ளலவர்களின் சுமுகமான குணத்தால் அவைகள் சுமுகமாகவே முடிந்தன. கட்டிடம் முடிந்து கலாசாலை ஆரம்பிக்கப்பட்ட பின் ஒவ்வொரு வருஷமும் ஒவ்வொரு வகுப்பும் ஆரம்பித்துவைத்து, வருஷா வருஷம் இலட்சக்கணக்காகத் தொகை கொடுத்துதவியும் இருக்கிறார். 1925-ம் ஆண்டிற்குள் விஞ்ஞான வகுப்பு, இன்டர்மீடியட் வகுப்பு, பி. ஏ. வகுப்பு முதலிய வகுப்புகள் அமைக்கப்பட்டன.

1925-ம் ஆண்டில் எம். ஏ. வகுப்பு ஆரம்பிக்கப்பட்டது. 1926-ல், தமிழ், வடமொழி, பண்டிதத் தேர்ச்சி வகுப்புகள் ஆரம்பிக்கப்பட்டன. 15-10-1925-ல் சென்னைக் கவர்னராக இருந்த லார்டு கோஷன் அவர்களால் விஞ்ஞானப் பிரிவு ஆரம்பித்து வைக்கப்பட்டது. ஒவ்வொரு வருஷத்திலும் ஒவ்வொரு புதிய வகுப்பும், அமைப்பும் வளர்ந்து கொண்டே வந்து, சங்கீதக் கலாசாலை, நாடகக் கலாசாலை முதலிய பல் வேறு வகுப்புகளும், விளையாட்டு

வகுப்புகளும், விளையாட்டு மைதானங்களும் அங்கு தனித் தபாலாபீசும், தனிப் போலீசும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

## ஏழைகளுக்கு இல்லம்

திருவேட்களத்திலுள்ள ஈசன் கோவிலையும், திருக்குளத்தையும் ராஜா அவர்கள் புதுப்பித்தனர். கலாசாலைக் கட்டிடத்திற் கருகிலுள்ள சில குடிசை வீட்டுக்காரர்கட்கு புதிய வீடுகள் கட்டிக்கொடுத்திருக்கின்றனர். ராஜா அவர்களின் இருதய கமலம் போல் அண்ணாமலைக் கலாசாலையைக் காப்பாற்றி வருகிறார். கல்வியில் அவருக்கிருக்கும் ஆர்வமும், கருணை கொண்ட மனப்பான்மையும் ஒன்றுசேர்ந்த சின்னமாக— தென்னாட்டின் கலைக்கோயிலாக — அறப்பணியின் மகுடமாக—அண்ணாமலை சர்வ கலாசாலை விளங்குகிறது. தில்லைச் சிதம்பரம் அன்று புகழ்பெற்றது சிற்சபை நாதன் திருக்கோவிலால் — நந்தனாரெனும் நாயனாரால் பிறகு சிறப்புற்றது. இன்று அகில உலகும் தலைநிமிர்ந்து பார்த்துச் சிதம்பரத்தை ஆர்வத்துடன் பேசிப் புகழ்வது **வள்ளல் அண்ணாமலையார்** ஏற்படுத்திய பல் கலைக் கழகச் சின்னத்தால் என்பது மிகையாகாது.

# அண்ணாமலை நகர்!

"என்னருந் தமிழ் நாட்டின்கண்
எல்லோரும் கல்வி கற்றுப்
பன்னருங் கலை ஞானத்தால்,
பராக்ரமத்தால், அன்பால்,
உன்னத இம மலை போல்
ஓங்கிடும் கீர்த்தி யெய்தி
இன்புற்றார் என்று மற்றோர்
இயம்பக் கேட்டிடல், என்னாளோ!"

— பாரதிதாசன்.

தென்னிந்திய இருப்புப் பாதையின் முதல் வழியில் (Main Line) சென்னையிலிருந்து பிரயாணம் செய்கிறவர்கள், புகை வண்டியி விருந்தபடியே ஒரு நாகரிக மாளிகையின் கம்பீரமான தோற்றத்தைக் காண்கிறார்க ளென்றால், சென்னைப்பட்டினத்துக்கு அப் பால், அண்ணாமலைப் பல்கலைக் கழகமாகத் தான் அது இருக்க முடியும்! அந்தக் கலைக் கழகம், அவ்வளவு கம்பீரமான தோற்றத் துடன் அமைந்திருக்கிறது. அங்கு அக்கட் டிடத்தின் துணைவர்களே போல் மற்றும் பல கட்டிடங்களும் அங்கம் வகிக்கின்றன.

அவைகள், அண்ணுமலை நகர மாணவ, மாண விகளுக்குத் தங்கும் வசதி யளிப்பதற்காக ராஜாவால் கட்டித்தரப்பட்ட விடுதிகள். அவரவர்களுக்கேற்பட்ட உணவுச்சாலைகள், வைத்தியசாலை, புத்தகங்கள் வேண்டியிருப் பின், அறிவுப் பசியைத் தணிக்கும் பொருட்டு அமைக்கப்பட்டிருக்கும் பெரிய தொரு புத்தகாலயம். பௌதிக, ரஸாயன, உயிர்நூல், தாவர வர்க்க சாஸ்திரங்கள் கற் கும் பொருட்டு அவற்றிற்கு வேண்டிய எல்லா வசதிகளுடனும் கூடிய ஆய்வுக் கூடங்கள். இவைகளில் ஆராய்ச்சி செய்த எல்லா விஷயங்களையும் பற்றி, மனம் விட்டு ஒருவருடனொருவர் அறிவொடு கலந்து வாதங்கள் புரிந்து அறிவைப் பெருக்கிக் கொள்ளும் இடமான இலக்கிய சாஸ்திர ஆராய்ச்சி மண்டபம், இவ்வளவிலும் தேர்ந்து கலைவல்லுனரான பின்பு, அவரவர் கள் திறமைக்குத் தக்கபடி கௌரவப் பட்ட மளிக்கும் பட்டமளிப்பு மகா மண்டபம். இவ்வளவையுந்தான், அண்ணுமலைப் பல் கழகக் கட்டிடத்தின் துணை அங்கத்தினர் கட்டிடங்களாக அமைந்திருக்கின்றன வென்று குறிக்கப்பட்டது. அம்மட்டுமா? பூந்தோட்டமும், பரந்த விளையாட்டு மைதானமும் அங்கிருக்கின்றன! சர்வ கலா சங்கத்துக்குள் நுழைய முன்பாகவே

வெளிப்புறம் இருமருங்கிலும் பாதையி ஞேரமாக அமைக்கப்பட்டிருக்கும் நீர்த் தேக்கமும், கழகத்தைச் சுற்றியிருக்கும் இயற்கைப் பசுமரங்களும் இன்பக் காற்றை அங்கு வதிபவர்களுக்கு நல்குவதற்குதவியா யிருப்பதுடன், பார்ப்பதற்கும் மிக்க மன மகிழ்ச்சியை உண்டாக்குவதாயு மிருக்கின் றன. ரயில் நிலயத்திலிருந்து அழகான ரோடுகள். இம்மாதிரி எல்லா வசதிகளை யும் இயற்கையாகவும், செயற்கையாகவும் உள்ள அந்த இடத்தைத்தான் நாம் **அண்ணு மலை நகர்** என்று குறிப்பிடுகிறோம்.

நமக்கு முன்பாகவே, அந்த நகரத்துக்கு வருவோர் போவாரது சௌகரியங்களையும், அண்ணுமலையின் பெயர் விளக்கத்தையும் அடிப்படையாகக் கருதி அவ்வூர் மக்கள் **அண்ணுமலை நகர்** என்ற பெயரையும் அந்நக ருக்கு வழங்கியிருப்பதுடன் புகைரத நில யத்தாரும் ரயில் நிலயத்திற்கு **அண்ணுமலை நகர்** எனவும் பெயரிட்டிருக்கின்றனர். **தனி யொருவர் பெயரால்** ஒரு புகை வண்டி நிலயப் பெயர் அமைக்கப்பெற்றது **இது ஒன்றுதான்** என்பதும் குறிப்பிடத்தக்கது.

இப்பொழுது அந்நகர் மொத்தம் 550 ஏக்கர் நிலப் பரப்பில் அமைந்திருக்கிறது. அங்கு ஆண்டுதோறும் ஆயிரக் கணக்கான மாணவ மாணவிகள் கல்வி கேள்விகளில்

தேர்ச்சி யடைகிருர்கள் என்பதுடன், அங்கு கல்வி போதிக்கும் ஆசிரியர்களுக்கும் தக்க வசதிகளுடைய மாளிகைகள் கட்டித்தரப் பட்டிருக்கின்றன. அவர்களுடைய குழந்தை கள் அங்கேயே கல்வி கற்கும் வசதி கருதியும், மற்றும் கழகத்தில் வேலே செய்யும் இதர சிறு சிப்பந்திகளின் குழந்தைகளுக்குக் கல்வி போதிக்கும் முறையிலும், ராஜா அவர் களால் அண்ணுமலே நகரில் ஓர் ஆரம்பப் பள்ளிக்கூடம் வைத்துக் கொடுக்கப்பட் டிருக்கிறது. விருந்தினர்கள் தங்கத் தனித் தனியாகக் கட்டிடங்கள் ஏராளமாகக் கட்டப்பட்டிருக்கின்றன. இவ்வளவு சிறந்த முறையில் அண்ணுமலே நகரும், அண்ணு மலேப் பல்கலேக் கழகமும் கிடைத்திருப்ப தும், தென்னுட்டில் ஒரு பெருங்கொடை யாளர் நம் காலத்தில் வாழ்ந்திருப்பதும், தமிழ் நாடுசெய்த தவப்பயன் என்று கூறு வதில் தப்பிதமில்லே.

### அரசாங்கப் பாராட்டுகள்

பேரார்வத்துடனும், பெருங் கொடைக ளுடனும் மனித சமூகத்துக்குத் தொண்டு செய்துவரும் அண்ணுமலே வள்ளலின் புகழ் தற்கரிய செய்கஜேக் கண்டு, பலப்பல கௌரவப் பட்டங்கள் ஆண்டு தோறும் அவ ரைத் தேடிக்கொண்டு வந்தன.

**1912**ல் ராவ்பகதூர் என்ற பட்டம் அரசாங் கத்தாரால் கொடுக்கப்பட்டது.

**1916**ல் சென்னைச் சட்டசபைக்குத் தேர்ந் தெடுக்கப்பட்டார்.

**1922**ல் திவான்பகதூர் என்ற பட்டமளிக் கப்பட்டது.

அப்பால் **1923**ம் வருடத்தில் நைட் பட் டம் பெற்றுக்கொண்டார். இந்த மூன்று பட்டங்களுக்கும் பிறகுதான் அண்ணுமலைப் பல்கலைக் கழகம் நிறுவப்பெற்றதாகையால், இந்தப் பெரிய கொடைக்குத் தக்கபடியாக அண்ணுமலையின் பரம்பரையில் வருபவர்க ளெல்லாரையுமே கௌரவப்படுத்தும்படி யான ராஜா என்ற பட்டம் 1929ல் வழங்கப் பட்டது. ராஜா என்ற பட்டம் இவ்வள்ள லின் பெருங்கொடைக்கு வழங்கப்பட்டது எல்லா வகையிலும் மிகப் பொருத்த மென்றே கூறலாம்.

**1932**ல் சென்னை சர்வகலாசாலையார் இவருக்கு (LL. D.) என்ற சிறந்த கௌர வப் பட்டத்தையும் வழங்கியிருக்கின்றனர்.

அப்பால் 'ஸர்' என்ற பட்டமும் வந்தது.

1941-ம் ஆண்டில் ராஜா அவர்கள் தமி ழிசைக்குச் செய்த பெருங்கொடையின் சின்னமாகத் தமிழ் நாட்டினரால் தென்னுட்டு வள்ளல் என்ற பட்டத்தைக் கொடுத்து வாழ்த்துகின்றனர் தென்னுட்டு மக்கள்.

## மற்றவகைப் பாராட்டுதல்கள்

தொண்ணூற்ருரூர் நகரத்தார்கள் தங்களின் நன்மை தின்மைகளின் பொருட்டு ராமனுதபுரம் ஜில்லாவிலுள்ள கோவிலூர் என்ற ஊரில், தங்கள் சமூகக் கூட்டங்களை நடத்தி வருவதுபற்றி முன் அத்தியாய மொன்றில் கூறப்பட்டிருக்கிறது ஞாபக மிருக்கலாம். அதே கோவிலூரில் 1930ம் வருடம் ஒரு ராஜ திருநாள் நடைபெற்றது. அந்தத் திருநாளை கலியுக இந்திர விழா என்றும் நாம் கூறலாம். அன்று செட்டிமார் நாட்டிலுள்ள 96 நகரச் செட்டியார்களும் அங்கு கூடியிருந்தார்கள். இயற்கையிலேயே அக் கோவிலூர் மிகவும் அழகுடன் விளங்கும் கிராமம். காரைக்குடியிலிருந்து மதுரை செல்லும் வழியில் ஒரு மைல் தூரத்தில் இருக்கிறது கோவிலூர்.

## கோவிலூர் விழா

காரைக்குடியிலிருந்து அவ்வூர் வரைக்கும் நெடிய வயல்கள் சூழ்ந்திருக்கின்றன. அந்த வயல்களுக்கிடையே ஒரே நேராகச் செல்லும் வழியே கோவிலூர் வழி. காரைக்குடி முனிசிபல் எல்லையைத் தாண்டியதும் இரண்டு பக்கங்களிலும் சிப்பாய்களைப் போல, தென்னை மரங்கள் அணிவகுத்து நிற்பது ஒரு தனி அழகாயிருக்கும். செட்டி

நாட்டில், ராஜா அண்ணுமலேக்கு, பரம்பரை ராஜா பட்டம் வந்தவுடனே அந்தத் தென்னே மரங்கள் தங்கள்மீது வர்ணங்களே அப்பிக் கொண்டன. நாலடி உயரத்திற்குமேல் அந்த மரங்களில் கட்டப்பட்டிருந்த தோரணங் கள், 'ராஜா அண்ணுமலே நீடூழி வாழ்க !' என்று சொல்லுவது போல் சலசலவென்று சப்தித் துக்கொண்டிருந்தன. அந்தத் தென்னே மரங்களேத் தாண்டி ஊருக்குள் புகும்போது அங்குள்ள இரண்டு பெரிய தேர்க் கட்டிடங் கள் அழகிய வர்ணம் பூசப்பட்டு, 'வருக! வருக!!'வென்று கூறுவதுபோல் கண்களுக்கு ரம்மியமாய்த் தோன்றிக்கொண் டிருந்தன. அங்கிருந்து ஊருக்குள் செல்லும் பாதை யிலோ,இருமருங்கிலும் மகர தோரணங்கள், மின்சார விளக்குக ளெல்லாம் பொருத்தப் பெற்று, பழமையாக இருந்த ஒரு 'ஆர்ச்' சின்மீதும் புதுமை நிரம்பி, அழகு வடியும் கண் கொள்ளாக் காட்சிகள் அங்கு திகழ்ந்து கொண்டிருந்தன. அவற்றைத் தாண்டி அப் பால் சென்ருல், சிவன் கோவில், மைய மண்டபம், மடாலயங்கள் முதலியவைகளி லெல்லாம் ஜில்லென்று ஒளி வீசும் சுடர் விளக்குகள் பிரகாசித்தன. அவற்றை யடுத்து ஏக காலத்தில் லட்சம் ஜனங்கள் நிரம்பியிருக்கத்தக்க நான்கு பெரிய சிங்கா ரக் கொட்டகைகள் அமைக்கப்பட் டிருந்

தன. இவ்வளவு அலங்காரங்களையும் செய்ய-சுருங்கச் சொன்னால், அந்த ஊரையே புது ஊராக்கி இந்திர விழாத் தயாரிக்க—சற்றேறக் குறைய ஒரு மாதம் பிடித்ததென்று சொல்லலாம். அவ்வளவும் நடைபெற்ற பின்னர்தான் ஒரு நாள் ராஜா ஸர் அங்கு வந்தார்.

அன்றைக்கு அங்கே வந்திராத தமிழ் நாட்டுப் பணக்காரர்கள் ஒருவருமிருக்க முடியாது. உலகத்திலுள்ள எல்லாவிதமான தினுசு மோட்டார்களும்,வண்டிகளும், சைக்கிள்களும், குதிரை வண்டிகளும் அங்கு மிகுதியாயிருந்தன. ஒரு மனிதருக்கென்று நடைபெற்ற தனிச் சிறப்புக்களில் அன்றைக்கு நடைபெற்ற வைபவங்களைப் போல் மீண்டும் நடக்குமென்றோ, அல்லது அதற்கு முன்பு நடைபெற்றதென்றோ யாரும் உதாரணம் காட்டிவிட முடியாதென்றே சொல்லலாம். அவ்வளவு பெரிய சிறப்பான கொண்டாட்டம் அங்கே நடைபெற்றது. அந்தக் கொண்டாட்டத்தை நகரத்தார்களெல்லாரும் சேர்ந்து நடத்தினார்கள். அன்றைக்கு மட்டும் அந்தப் பாராட்டுக் கூட்டத்துக்கு லட்சக்கணக்கிலேயே செலவாகி யிருக்குமென்று கூட்டத்திற்கு வந்திருந்தோர் மதிப்பிட்டார்கள்.

பெரிய கூட்டமொன்றில் ராஜாவைப்

பாராட்டி ரைட் ஹானரபில் ஸ்ரீனிவாஸ சாஸ்திரியார் நீண்ட பிரசங்க மொன்று செய்தார்.

### சாஸ்திரியாரது பாராட்டு

இந்தப் பாராட்டுக் கொண்டாட்டத்திற்குத் தலைமை வகித்தவர் மகா கனம் வி. எஸ். ஸ்ரீனிவாஸ சாஸ்திரியாராகும். திரு. ஸ்ரீனிவாஸ சாஸ்திரியார் உலகப் புகழ் பெற்ற மனிதர் என்பதைச் சொல்லத் தேவையில்லை. அவர் தமது தலைமைப் பிரசங்கத்திற்கிடையில் ராஜாவைக் குறித்துச் சொன்ன சில விஷயங்களைப் பாருங்கள்:

"தம் சமூகத் தொண்டிலும், சிறப்பாகப் பணலேவாதேவித்தொழிலிலும்,சமூகத்திற்கே தலைவராகிறார் இவர். இம்பீரியல் பாங்கின் ஸ்தாபன அங்கத்தினராயும், சென்னை இந்தியன் பாங்கின் அங்கத்தினராயும் இருப்பதுடன்,இந்தியன் பாங்கில் நீண்ட தொடர்புடையவராயும்,பொது லேவாதேவித் தொழிலில் சமூகத்திற்கு அநுசரணையாகவும் இருக்கிறதினால் நக்ரத்தாரது சமூகத்துக்கே அது மிகவும் நல்லது, ஒரு பெருமை. நகரத்தாரது நலனுக்காக அவர் மேனாட்டுப் பிரயாணம்செய்ததும், பர்மா சட்டசபை சம்பந்தமாய் அவர் செய்த 1935-ம் வருட வேலையும் பர்மிய சர்க்காரது கவனத்தில் பதிவாகி யிருக்கிறது. மேலும் இந்தச் சம்பவங்கள் அமெரிக்காவின் கவனத்தையும் இழுத்தது,

அவரது சமூகத்தாருக்குப் பெரிய உபகாரமாக இருக்கிறது. இத்தகைய உபகாரங்களும், சமூக சேவைகளும் நகரத்தார் சமூகத்தின் தொழில் முறைகளைக் காலத்திற்குத்தக்கபடி அமைத்துக் கொள்ளவும் சாதனமா யிருந்திருக்கின்றன. அதனால் அவர்கள் சமூகமே புத்துயிர் பெற்ற தென்றே சொல்லலாம்.

"மாதருலகத்துக்கு அவர் செய்திருக்கும் சேவையும் மறக்க முடியாதது. அமைதியாகவும், பெருமையாகவும் அவர் மாதர்களுக்குச் செய்திருக்கும் சேவையினால், ஆண்-பெண் சமத்துவ நிலையையே உலகத்துக்குத் தெரிவித்திருக்கிறார் என்று சொல்லலாம். 'வில்லிங்டன்' ஸ்தாபனத்துக்குத் கொடுத்த 2 லட்ச ரூபாய்கள், லேடி பெண்ட்லண்ட் பெண்-குழந்தைகள் பராமரிப்பு வைத்திய நிலையத்துக்குக் கொடுத்த 3 லட்ச ரூபாய்கள், மற்றும் பல பெண்கள் சங்கங்களுக்கும், (நீலகிரி-அண்ணாமலை நகர்களில்) இன்னும் இர்வின் பெண் பள்ளிக்கூடம், சேவாசதனம் முதலியவைகளுக்குக் கொடுத்த தருமங்கள் இவைகளை யெல்லாம் நினைத்துப் பார்த்தால், பெண்ணரசியர் முன்னேற்றத்திற்கு அவர் செய்துள்ள சேவைகள் நன்கு புலனாகும்! இது மட்டுமா? நகரத்தார் சமூகப் பெண்கள் முன்னேற்றங் கருதி தமது மனைவியாரான ராணி அவர்களை மேனாட்டுச் சுற்றுப் பிரயாணத்தில் உடனழைத்துச் சென்றதும் குறிப்பிடத் தக்கது."

திருவாளர் சாஸ்திரியாரது பாராட்டின் சுருக்கம் இதுதான்.

ராஜா அவர்களும் முழு மனதுடன் ஒரு அரிய உபந்யாசம் செய்தார். செட்டிநாடு செல்வந்தர்கட்கு ராஜா ஸர் அவர்கள் மூலம் ஒரு தனி மதிப்பும், புகழும் ஏற்பட்டது என்பதை வாசகர்கள் ஒருபோதும் மறக்கவே கூடாது.

அந்தக் கொண்டாட்டத்திற்கென்று நடைபெற்ற வாண வேடிக்கையைப் போல், அவ்வளவு அற்புதமான வாணக் காட்சியை எங்கும் காண முடியாது, கண்டதுமில்லை.

மேலும் அந்தக் கொண்டாட்டத்தன்று தான் ராஜாவை நேரில் பார்த்தோர் பலர் “அடடா, சாது! பரமசாது! இவர்” என்று வியந்தனர். அதுவரைக்கும் “அவர் அப்படி யிருப்பார், இப்படி யிருப்பார்” என்றெல் லாம் ஜனங்கள் பேசிக்கொள்வதுதானே யொழிய நேரில் பார்த்துப் பேசி யிருப்பவர் கள் மிகவும் சொற்பமானவர்கள்தான்.

**தோற்றம்**

ராஜா மிகவும் ஆஜானுபாகுவான தோற்ற முடையவர். பார்க்கும்பொழுதே ‘தங்கக் கம்பி’ என்று சொல்லத் தோன்றும் அவர்களைப்பற்றி. தலையில் தலைப்பாகையும், நீண்ட கோட்டும், கால்சராயும் அணிந்து கொண்டு, அரசாங்கப் பட்டமளிப்புச் சின்

னங்களுடன் ராஜா அவர்கள் மக்கள் முன்பு தோற்றமளிக்கும்போது ஒரு ‘வள்ளல்’ என்பதற்குள்ள அத்தனை சிறப்பும், அவர்களிடம் பொருந்தியிருக்கிறதென்று எல்லோரும் சொல்லி விடலாம். அம்மாதிரி தோற்றத்திலேயேதான் நாம் அவரைக் கோவிலூர்க் கொண்டாட்டத்தின் போதும் இன்றும் பார்க்கிறோம். சிறு சிறு வார்த்தையாக வார்த்தைகளை அளந்து பேசும் சுபாவம் உடையவர். யாவரிடத்தும் மரியாதை உண்டு; ஆனால் ஒரு வார்த்தைகூட வீண் வார்த்தையாக இராது. இங்கிலீஷும் தமிழும் சுத்தமாகப் பேசுவார்.



## வள்ளலின் குடும்பம்

" பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற." — குறள்.

ராஜா அவர்களின் பதினுன்காவது வய தில் திருமதி சீதை ஆச்சி என்னும் குல மணியை மணந்ததாக ஏற்கனவே குறிப் பிடப்பட்டிருக்கிறது. ராஜா ஸர் அவர்க ளுக்கு மூன்று புதல்வர்களும், நான்கு புதல்வி களும் உண்டு.

முதல் குமாரர்தான் திரு. ஏ. முத்தையா **செட்டியார்.** இவர், பரம்பரைப் பட்டப்படி குமார ராஜா என்ற பெயருடனும், அரசாங் கத்தார் கொடுத்த ஸர் என்ற கௌரவப் பட்டத்துடனும் புகழ்பெற்று விளங்குகிருர்.

" மகன் தந்தைக் காற்று முதவி இவன்றந்தை
யென்னேற்ருன் கொல்லெனுஞ் சொல்."

என்ற முதுமொழிப்படி, தந்தையின் அடிச் சுவட்டைப் பின்பற்றி, வாணிபத் துறையி லும், அரசியல் துறையிலும், மொழிப்பற்று தலிலும், ஊக்கம் செலுத்திவருகிருர். தந்தை

யின் குறிப்பறிந்து நடப்பதில் குமார ராஜா ஸர் திரு. முத்தையா அவர்கள் திறமையான வர்கள். குமார ராஜா, வர்த்தகச் சங்கம், பல வியாபார ஸ்தலங்கள், விளையாட்டுச் சங் கங்கள், பல நிர்வாகசபைகள், சமூக சீர் திருத்தச் சங்கங்கள், யுத்த சபை, பல பாங்கு கள் முதலியவைகளில் பொறுப்புள்ள பதவி களில் இருந்து வெகு சாமர்த்தியமாகக் காரி யங்கள் பார்த்து வருகிருர். மேலும் இள வயதில் அரசியல் உலகத்தில் ஈடுபட்டவர் குமார ராஜா !

## முதல் மேயர்

சென்னை நகர மேயராக இரு தடவை களில் வீற்றிருந்தார். உலகத்திலுள்ள நகர சபை மேயர்களில் மிக இளவயதில் மேயர் பதவியை ஏற்றுக்கொண்டவரும் அவரே என்பது ஆச்சரியப்படத் தக்க விஷயம். அத்துடன் மேயர் என்ற பெயர் சென்னை நகரசபைத் தலைவருக்குக் கிடைத்தது இவர் காலத்தில் தான். இதைத் தவிர அவர் சென்னை மாகாண மந்திரியாகவும் இருந் திருக்கிருர். சென்னைச் சட்டசபையில் பல ஆண்டுகள் அங்கத்தினராகவும், எதிர்க் கட்சித் தலைவராகவும், பல கமிட்டிகளில் மெம்பராகவும், இருந்து, பொது ஜனங் கட்குத் தொண்டாற்றி வருகிருர்.



குமார ராஜா ஸர் M. A. முத்தய்ய செட்டியார், B.A., M.L.A.

(சென்னை நகர மேயராக இருந்தபோது எடுத்த படம்)

சென்னை மாகாண யுத்த நிதிக்கு பல்லா யிரக் கணக்காகத் தொகை கொடுத்துதவி யிருக்கிறார். சென்னை அரசாங்கத்தாருக்கு குமார ராஜாவிடம் மிக்க மதிப்பு உண்டு. அதுபோன்றே இந்திய அரசாங்கத்தாருக் கும் குமார ராஜா அவர்களிடம் விசேஷ மதிப்பு உண்டு என்பது, வைஸ்ராய் நிர் வாக சபை விஸ்தரிப்பின் போது குமார ராஜாவை வைஸ்ராய் அவர்கள் வர வழைத்து ஆலோசனை கேட்டதிலும், இந் திய வைஸ்ராயின் விஸ்தரிக்கப்பட்ட யுத்த நிர்வாக சபையில் அங்கத்தினராகத் தேர்ந் தெடுக்கப்பட்டதிலிருந்தும் நன்கு விளங்கு கிறது.

குமாரராஜாவுக்குத் தமிழ் மொழியிலும், தமிழ்ப் பாடல்களிலும், தமிழ்க் கலைகளிலும் அதிகமான ஆர்வமுண்டு. இவ்வார்வம் சில வேளைகளில், அவரையும் மீறிப் பீறிக் கொண்டு கிளம்புவதைப் பிரசங்க மேடை களில் தெள்ளத் தெளியக் காணலாம். நெருக்கடியான சந்தர்ப்பங்களில், சாமர்த் தியமாக நடந்துகொள்ளும் திறமை, தந்தையைப் போல், தனயருக்குமுண்டு. ஒருவரைப் பார்க்கும்போதே அவருடைய குணகுணங்களையும் நோக்கத்தையும் அவர் நன்கு தெரிந்துகொள்ளக் கூடி யவர்.

“ வாய் நிறைந்த சிரிப்பு, பரந்த நெற்றி, சுழற்றிப் பார்க்கும் கண்கள்—கூப்பிய கரங்கள், சுறுசுறுப்பான பார்வை, கம்பீரமான நடை, அச்சமின்றி உரக்கப் பேசும் சுபாவம், முதலியவற்றுடன் ஆஜானுபாகுவாக இருப்பவர். யாரையாவது, சென்னையிலுள்ள செட்டிநாட்டு அரண்மனையில் பார்த்தால் அவர்தான், குமாரராஜா ஸர் முத்தையா செட்டியார் என்பதை அறிந்து கொள்ளுங்கள்.”

## ஒரு குறை

யாரிடத்தும் சுமுகமாகப் பேசக்கூடிய சுபாவமுடையவர். இன்னும் கொஞ்சம் சொல்லப் போனால்—சிறிது பழகிவிட்டால் தோள்மேல் கைபோட்டுக் கொண்டும் பேசுவார். இவரிடம் ஒரே ஒரு குறையுண்டு. அதாவது, தாம் ஒரு கோடீச்வரரின் மைந்தர் என்பதையும், அரசாங்க மந்திரி முதலிய பல பெரும் பதவியைப் பார்த்த அறிஞர் என்பதையும், “ ஸர் ” டைட்டில் பெற்ற பிரபு என்பதையும் மறந்து, யாரிடத்தும் அன்பும்கனிவும் பொருந்தப் பேசி மரியாதை செய்வதேயாம். “ அடே யாரங்கே! ஐயாவுக்கு காபி கொண்டுவா, கலராவது சாப்பிடுகிறீர்களா ?” என்று கூறி, வந்தவர்களை உட்கார வைத்து உபசரிக்கும் குணம் திரு. முத்தையாவுக்கு மிகுதியும் உண்டு.

“சமத்துவம், சகோதரத்வம்” என்றுநாம்

பல ஆண்டுகளாக, மேடைகளிலும் பத்திரி கைகளிலும், பார்த்தும் கேட்டும் இருந்த மொழிகளின் அனுபவத்தை குமார ராஜா விடம் காணலாம் நல்ல நோக்கத்துடன் சென்ருல். செல்வத்தில் திளைத்து, பதவியில் அமர்ந்து அதிகாரம்செய்யும் பிறவிச்செல்வர் களில், அடக்கமான குணமும், அன்பான மொழியும், மரியாதையாக வரவேற்று உப சரிக்குந் தன்மையும் அமைந்திருப்பவர் கோடிக்கொருவர்தான் என்பது எமதனுபவம். உண்மைதான், கோடீச்வரரின் சுத்புத்திர ரல்லவா இவர்!

குமார ராஜாவின் வாழ்க்கைத் துணை வியார் திருமதி மெய்யம்மை ஆச்சி என்னும் குலமணியார். இவர்களுக்கு, 12-வயதுள்ள முத்தையா, 9 வயதுள்ள ராமய்யா என்ற இரு புத்திர சிகாமணிகள் உண்டு.

குமார ராஜாவுக்கு நேர் இளையவரின் பெயர் திரு. ராமனுதன் செட்டியார். இவர் தற்சமயம் சென்னையின் உதவி ஷெரீபாக இருக்கின்ருர். இவரின் மனைவியார் பெயர் வள்ளியம்மை ஆச்சி என்பர். நான்கு வய துள்ள ராமய்யா என்ற சிறுவன், இவர்க ளுடைய செல்வன்.

ராஜா அவர்களின் மும்மணிகளான புதல்வர்களில் கடைசிப் புதல்வரின் பெயர் திரு. சிதம்பரம் என்று கூறுவர். ராஜா ஸர்

அவர்கட்கு, தில்லைச் சிதம்பரத்தின்மேல் இருக்கும் பற்றுதலுக் கடையாளமாகத் தமது மூன்ருவது புதல்வருக்குச் "சிதம் பரம்" என்று பெயர் வைத்தாராம். திரு. சிதம்பரத்திற்கும் ஒரு குழந்தை யிருக் கின்றது.

ராஜா அவர்களின் புதல்வியரும், பெருமை தங்கிய கணவன்மார்களுடனும், புத்திரர்களுடனும் வாழ்ந்து வருகிருர்கள்.

## செட்டிநாடு பாங்க்

இயற்கையாகவே ராஜா அவர்களின் பரம்பரை, லட்சாதிபதிகளைக் கொண்டதாயிருந்து வந்ததென்பதை முன்பு கூறியிருக் கிருேம். அதற்குக் காரணம் லேவாதேவித் தொழில்தான். அதை (Banking or Money-Lending Business) என்று ஆங்கிலத்தில் குறிப்பிடுகிருர்கள். இந்தத் தொழிலே ஆரம்பமுதல் இன்றுவரை ராஜாவின் முதன்மைத் தொழிலாக இருந்து வந்தது. செட்டியார்களில் நூற்றுக்குத் தொண்ணூற்ருென் பதின்மரும் லேவாதேவித் தொழிலில்தான் பணக்காரராகி யிருக்கிருர்க ளென்பதையும் இங்கு நாம் குறிப்பிடவேண்டும்.

இந்த லேவாதேவித் தொழில் முறையில் ராஜா ஒரு பெரிய நிபுணர். அவருடைய தொழில் நிபுணத்துவத்தாலேயே கீழ்நாடு

கள் முழுவதிலும், அதாவது செட்டியார்கள் தொழில் நடத்தும் இடங்களிலெல்லாம், கடைகள் ஏற்படுத்த முடிந்தது. லட்சாதி பதியாக இருந்த மு. அ. விலாசமும் கோடீச் வர விலாசமாய் மாறிற்று! பிறகுதான் ராஜா அவர்கள், தமது கடைகளையெல்லாம் தி பாங்க் ஆப் செட்டிநாடு (The Bank of Chettinad) என்று மாற்றி யமைத்தார்கள். ராஜா ஸர் ஒரு பெரிய பொருளாதார நிபுண ரென்று சர்க்கார் தங்கள் ரிகார்டுகளில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

பத்து வருடங்களுக்கு முன்பு 'செட்டி நாடு' என்று சொன்னால், ராமநாதபுரம், மதுரை ஜில்லாக்களில் உள்ள செட்டிமார் கள் வசிக்கும் பகுதி என்றே பொருள்படும். அந்நிலையை ராஜா அவர்கள் மாற்றினார்கள். பொதுப் பெயராக மட்டும் செட்டிநாடு என்று சொல்லிவிட்டால் இன்ன இட மென்றே தெரியவில்லை என்பதற்காகவும், செட்டிமார்கள் சமூகத்துக்கே ஒரு பெரும் கௌரவம் கிடைக்க வேண்டுமென்ற பெரு நோக்கத்துடனும் நிரந்தரமாகத் தம் பிறப் பிடமாகிய கானாடுகாத்தானையே செட்டிநாடு என்று மாற்றியமைக்கச் செய்தார்.

இதன் மூலம், பரவலாக இன்ன ஊரென் பதைக் குறிக்காமலிருந்த ஒரு பதம், ஓர் ஊரின் பெயராகவே மாறி, சரித்திரத்திலும்,

கண்ணுக்கு முன்பாகவும் நிலைத்திருக்கிறது இன்று.

செட்டியார்களுக்குள் பெரும்பாலும் லேவாதேவித் தொழில் சம்பந்தமாக, விவகாரங்கள் அடிக்கடி நேரிடுவது வழக்கம். தொழில் என்றிருந்தால் அதில் பலவித விவகாரங்களுக்கும் இடமுண்டல்லவா? அம்மாதிரி விவகாரங்களிலெல்லாம் ராஜா அவர்களுக்கே தலைமை ஸ்தானம் கிடைக்கும்! எந்தவிதமான விவகாரங்களையும் சிக்கலின்றித் தீர்த்து விடுவதில் ராஜா நிபுணர். மேலும் பிரசித்திபெற்ற ஒரு பெரிய மனிதரை மீறி யாரும் எக்காரியத்தையும் செய்வதென்றால் ரொம்ப யோசித்துத்தானே செய்ய வேண்டும்! இந்த வகையிலும் ராஜா அவர்களின் கௌரவம் பெருகி, சிறப்பாகச் செட்டியார்களின் சமூகத்திற்கே தலைமை வகிக்கும் பெரும் பேற்றையும் அவர் பெற்றிருக்கிறார்.

## லேவாதேவிச் சங்கங்களில் தலைமை!

நாட்டின் லேவாதேவித் தொழிலுடையவர்களிடையே தலைமை ஸ்தானத்தை அவர்கள் வகித்து வந்ததால், இதர லேவாதேவித் தொழிலுடையவர்களும், தொழில் நடத்தும் சங்கங்களும் (Banks) அவர்களைத் தங்கள் தங்கள் சங்கங்களுக்கும் தலைவராயிருக்க விரும்

பிஞர்கள். அந்த முறையிலும் அவர் பல லேவாதேவிச் சங்கங்களுக்குத் தலேவராய் விளங்குகிருர். இந்தியன் பாங்கியில் ஒரு டைரக்டராகவும், இம்பீரியல் பாங்கியின் கவர்னராகவும் அவர் இருந்திருக்கிருர். இந்தியப் பாங்குத் தொழிலுலகத்திலே, பாங்குப் பிரபுவான அவர், இந்திய வர்த்தக சங்கங்களிலும், கடலோர வர்த்தக சங்கத் தலேவராகவும், இதர லேவாதேவிகளின் தலேவராகவும்கூட இருந்து புகழ்பெற்றிருக்கிருர். புகழ்பெற்ற ராஜா மட்டுமே அம்மாதிரியிருந்திருக்கிருரென்று சொல்வதற்கில்லே. அவருடைய குடும்பமே பிரபுத்துவத்தில் இருந்து வந்ததோடு, அவருடைய சந்ததியார்களும் எல்லாத் துறைகளிலும் ஈடுபடும் ஆர்வமுள்ளவர்களாக இருக்கிருர்கள். அதுவும் அண்ணுமலே யவர்களின்காலத்திலேயே என்பது குறிப்பிடத்தக்கது.

### சமூகத் தலேவர்!

இவ்வகையாக எல்லாத் துறைகளிலும் அவர் தலேமை ஸ்தானத்தை வகித்து வருங்கால் பழைய பிரஞ்சு ஏகாதிபத்தியத்தின் ஓர் அங்கமான கொச்சின்-சைஞவிலே செட்டிமார்களுடைய தொழில் முறைக்குப் பெரிய இடையூரென்று நேர்ந்தது. அந்த இடையூருனது ஏறக்குறைய ஜெர்மனியின்

தலைவரான ஹிட்லர், அந்த நாட்டின் பணக்காரர்களும் மகா புத்திசாலிகளுமான யூதர்களின்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளைப் போல இருந்ததென்றே கூறவேண்டும். ஹிட்லர் எடுத்துக் கொண்ட கொடும் நடவடிக்கைகளால் யூத ஜாதியே ஜெர்மனியில் இன்று இல்லை என்று ஆகிவிட்டது. ஆனால், இந்தோ-சீன அரசாங்கம் நகரத்தார் சமூகத்தின்மீது துவேஷங் கொண்டு நடவடிக்கை எடுத்துக் கொண்டு நான்கு நகரத்தாரை அங்கிருந்து வெளியேற்றின வுடனே, ராஜா ஸர் அண்ணாமலை அந்த நடவடிக்கையைக் கவனித்து முன் வந்தார். செட்டியார் சமூகமும் ஒன்று திரண்டது. அபார சாமர்த்தியசாலியான அண்ணாமலை வள்ளலாலேயே தங்கள் சமூகத்திற்கு அயல் நாட்டில் வந்திருக்கும் இடையூறு நீங்கு மென்றும் கருதிற்று. இதையும் தம் சமூகத் தொழிலுக்குவரும் தீங்கையும் உணர்ந்த இச் சமூகத் தலைவர், உடனே கொச்சின்-சைனுவுக்குப் புறப்பட்டார். ஆங்குச் சென்று அரசாங்கத்தினருடன் பேசி அற்புதமான வெற்றி பெற்றார். அதன்மூலம் தம் சமூகத்தவர் கொச்சின்-சைனுவில் செய்து வரும் தொழிலையே காப்பாற்றி விட்டார். இந்தப் பெருங் காரியத்தைச் செய்து வெற்றிபெற்றதற்காகச் செட்டியார் சமூகம் அவருக்குப்

பெரிய மரியாதைகளைச் செய்து வரவேற்றது. அந்தச் சமயத்திலேயே தனித்து வெளிநாடுகளில் தொழில் நடத்திக்கொண்டிருந்த தம்மவர்களை ஒன்று சேர்த்து, 'நாட்டுக்கோட்டை **நகரத்தார்கள் சங்கம்**' என்ற ஸ்தாபனத்தை, இந்தியா, பர்மா, சிலோன், மலேயா, இந்தோ-சீனா முதலிய எல்லா இடங்களிலும் நிறுவச் செய்தார். மேற்கூறப்பட்ட காரணங்களினாலெல்லாம் அவர் சமூகத்திலேயே, **சமூகத் தலைவர்** என்ற முதன்மை ஸ்தானமும் வந்தது.

**சுற்றுப் பிரயாணம்**

ராஜா ஸர் அண்ணாமலை முதலில் செட்டியார்கள் லேவாதேவி நடத்தும் எல்லா ஊர்களிலும் சுற்றுப் பிரயாணம் செய்தார். இலங்கைத் தீவு, சிங்கப்பூர், அதன் தொடர்புள்ள பகுதிகள் இந்தோ-சீனா, கொச்சின்-சீனா, பர்மா, கீழ்மேல் பகுதிகள் முழுவதிலும் சென்று, லேவாதேவிக்காரர்களையும், லேவா தேவிகளையும் நிதானம் செய்துவைத்து, ஆங்காங்கு பெரிய பெரிய மரியாதைகளையெல்லாம் அடைந்தார். அவருக்கு ஒவ்வொரு பிரதேசத்திலும் நடத்தப்பட்ட மரியாதைகள், வரவேற்பு உபசாரங்கள், ஊர்வலங்கள் முதலியவைகளையும், அவற்றிற்கு ராஜா கூறிய தக்க பதில்களையும் இப்புத்தகத்தில்

குறிப்பிடுவதென்ருல், அவையே தனியாக ஒரு பெரும் புராணமாக ஆய்விடுமாதலால் அவைகளை இங்கு கூருமல் விடுகிரும். இந்தச் சுற்றுப் பிரயாணம் 1929-ம் வருடம் மே மாதம் தொடங்கி 1930-ம் ஆு ஜனவரி மாதம் 6வேயோடு முடிவு பெற்றது. அன்று தினம் சென்னைக்கு வந்து சேர்ந்த செட்டி நாட்டு ராஜா அவர்களுக்குச் சென்னை நகரப் பிரமுகர்கள் பலரால் அளிக்கப்பட்ட வர வேற்பும் ராஜ வரவேற்பாகவே இருந் தது.

அடுத்தபடியாக பர்மா இந்தியப் பிரி வினை சமயத்தில் பர்மிய நாட்டில் செட்டி யார்களது தொழிலுக்குப் பல இடையூறு கள் நேர்ந்தன. பர்மிய நாட்டிலே இன்று செல்வம் கொழித்திருப்பதற்கு ஒரு கார ணம் செட்டியார்களது லேவாதேவித் தொழிலாகும். அப்படியிருந்தும், அந்நாட் டில் அவர்களுக்கென்று பர்மியப் பிரதிநிதி கள் சபையிலே யாதொரு ஸ்தானமும் கிடை யாது அக்காலத்தில் - அதாவது 1935-வது வருடத்துக்குமுன். தமது சமூகத்தாருக்குச் செய்யப்பட் டிருக்கும் அக்குறையையும், அதனுல் அங்குள்ளவர்கள் அடைந்திருக்கும் கஷ்டங்களையும் நிவர்த்திக்கும் பொருட்டு அண்ணுமலையார் ஆங்கில நாட்டுக்குப் புறப் பட்டார் அதே 1935-ல். அதுவும் பர்மிய

தேச இந்தியத் தொழில்களின் தூது கோஷ்டிக்கே தலைவராக!

**பர்மியத் தொல்லை**

அந்தத் தலைவர் அதிலும் வெற்றியடைந்தார். பர்மாவில் அப்பொழுது நேர்ந்திருந்த கஷ்டங்களையும் நிவர்த்தி செய்தார். பர்மாவில் வாழும் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களுக்கென்று இருந்த 'நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் வர்த்தக சங்க'த்திற்கும், பர்மிய ஜனப்பிரதிநிதி சபையிலே (சட்ட சபையில்) ஓர் அங்கம் கொடுக்கும்படி செய்தார். ஆங்கில நாட்டிலுள்ள அபார ராஜதந்திரிகளின் தொடர்புகளையெல்லாம் அதன் மூலமாகப் பெற்று, பெருமையும் கொண்டார். அம்மட்டுந்தானா? இங்கிலாந்திலுள்ள பல பிரபுக்களையும் சந்தித்தார். ஆங்கில சாம்ராஜ்யத்தின் அரசரான ஐந்தாம் ஜார்ஜ் மகிபதியையும் அறிமுகம் செய்து கொண்டு, அவருடன் அளவளாவி விருந்துண்டபின், அங்கிருந்தபடியே ஆங்கிலேய தேசங்களனைத்தையும், இங்கிலாந்து, பிரான்சு, இத்தாலி, ஜெர்மனி முதலிய தேசங்களெல்லாவற்றையுமே பார்த்துக்கொண்டு, இந்தோ - சீனாவின் தலைமை சர்க்காராக இருந்த பிரெஞ்சு தேசத்தின் தலை நகரமான பாரிசில், அப்பொழுது அதிகாரிகளாயிருந்த

அரசியல் தலைவர்களை யெல்லாம் சந்தித்து, இந்தோ-சீனுவில் உள்ள நகரத்தாரின் அசௌகரியங்களை எடுத்துரைத்துத் தக்க பரிகாரம் பெற்றபின், கலியுகக் குபேர கண்டமாகிய அமெரிக்காக் கண்டத்திலும் சுற்றுப்பிரயாணங்கள்செய்துவிட்டு வெற்றி யடைந்த வேந்தராகத் தமிழகத்தினை அடைந்தார். அண்ணுமலையார் அயல்நாடு களில் சுற்றுப் பிரயாணம் செய்த காலங்களி லெல்லாம், அவருடைய மனைவியார் திருமதி சீதை ஆச்சியாரும் உடனிருந்தா ரென்பதையும் நாம் இங்கே குறிப்பிடவேண்டிய தவசிய மாக இருக்கிறது.

## சீர்திருத்தத் தொண்டு

"வில்லார்க்கும் நல்ல நுதல்மாதர் எல்லார்க்கும்
விடுதலையாம் என்றே மணிமுரசம் ஆர்ப்பிரே !"

— பாரதிதாசன்

திருமதி சீதை ஆச்சியார் அவருடன் சுற்றுப் பிரயாணம் செய்த விஷயத்தை நாம் முக்கியமாக ஏன் குறிப்பிடவேண்டு மென்ருல், அங்குதான் அண்ணுமலையாரின் முக்கியமான மனே தைரியம் வெளிப்படுகிறது !

செட்டியார்களது சமூகத்திலே, எவ்வளவு பெரிய மனிதர்களாயினும் சரி, அல்லது மற்றெவ்வித முள்ளவர்களாயினும் சரியே, தங்கள் மனைவிமார்களையோ, அல்லது சுற்றத்தார்களையோ, (பெண்களைக்) கடல் கடந்து எந்தத் தேசங்களுக்கும் பழங்காலத்தில் உடனழைத்துச் செல்லும் வழக்கமே கிடையாது. (பழங்காலத்தில் என்று நாம் இங்கு குறிப்பிடுவதைச் சுமார் பத்து வருடங்களுக்கு முன்பு என்றுதான் நீங்கள் கொள்ளவேண்டும் !) இம்மாதிரி ஒரு வழக்கம் செட்டியார் சமூகத்திலே எப்பொழுது

முதல் ஏற்பட்டிருந்ததென்பதை நாம் சொல்ல முடியவில்லையென்றாலும், அது அநுஷ்டிக்கப்பட்டு வந்த விதத்திலிருந்து, 'திரைகடலோடியுந் திரவியந்தேடு' என்ற வேத வாக்கை அப்படியே கடைப்பிடித்து வந்தவர்களான செட்டியார்கள், தொன்று தொட்டே தங்கள்குலப் பெண்ணரசிகளைக் கடல் கடந்த பிரதேசங்களுக்கு உடனழைத்துச் செல்லாம லிருந்திருக்கிறார்கள் என்றுதான் நிர்ணயிக்கவேண்டியிருக்கிறது ஏன்? இன்றுங்கூடப் பெரும்பாலான செட்டியார்கள் தங்கள் பெண்களை வெளிநாடுகளுக் கழைத்துச் செல்லுவதில் ஏதோ தப்பித மிருக்கிறதென்று கருதுகிறார்களென்றால், முன்னுள்ள நிலையை அதிகமாக விளக்கவா வேண்டும்? அவ்வளவு கட்டுப்பாட்டுடனிருந்த நிலையில்தான், சிறிது மாறுதல் செய்ய முற்பட்டு, ராஜா ஸர் அண்ணாமலை, மிகவும் துணிச்சலுடன் தமது துணைவியாரைக் கடல்கடந்து தாம் சென்ற சென்ற தேசங்களுக்கெல்லாம் உடனழைத்துச் சென்றிருக்கிறார். இது எவ்வளவு பெரிய தைரியமான தொண்டு என்பதை நினைத்துப் பாருங்கள்!

திருமதி அண்ணாமலையார், தமது கணவருடன் வெளிநாட்டுப் பிரயாணங்கள் செய்த பின் ஊர் திரும்பி வந்தபோது செட்டியார்

பெண்களில் பெரும்பாலோர் அவரைப் போய்க் குசலம் விசாரித்திருக்கிறார்கள். அவர்களுக் கெல்லாம் தாம் சுற்றுப் பிரயாணத்தால் அடைந்த பலனையும், அங்கங்குள்ள ஜனங்களின் ஆவலையும் தம் குலப் பெண்களுக்கு விவரமாய்ச்சொல்லியதுடன், ஒவ்வொரு பெண்ணும் தம்மைப்போல உலக அநுபவமடைய வேண்டுமென்றும் சொல்லியிருக்கிறார். பெண்களுக்கிடையில் ஒரு விஷயம் வெளியாகிற தென்றால் கேட்க வேண்டுமா அங்கு நடைபெறும் புரட்சிக்கு! திருமதி அண்ணாமலையாரால் சொல்லப்பட்ட சுற்றுப் புதினங்கள் சில மாதங்களுக் குள்ளேயே செட்டிநாடு முழுமையும் உள்ள மூலை முடுக்குகளிலெல்லாம் பரவி, செட்டியார் பெண்களெல்லாரையுமே வெளிப் பிரயாணம் செய்து பார்க்கும்படி தூண்டிவிட்டன. இந்தத் தூண்டுதல் அத்துடன் மட்டும் நின்றபாடில்லை. செட்டியார் சமூக ஆண்களையும்கூடத் தங்கள் மனைவி மக்களைக் கடல் கடந்து அழைத்துச் செல்லக் காரணமாயிற்று. நாளடைவில் வசதிபெற்ற எல்லாச் செட்டியார்களுமே தம் பெண்டுபிள்ளைகளுடன் அயல்நாட்டுக்குப் போய்வருகின்றனர். மிகவும் தைரியத்துடன் ராஜா ஸர் அண்ணாமலை யவர்கள் தமது துணைவியாரை அயல் நாடுகளுக்குத் தம்முடன் அழைத்துச்

செல்லாமலிருந்தால், செட்டியார் சமூகம் இந்தச் சமூக சீர்திருத்தத்தை அடைந்தி ருக்க முடியாதல்லவா! இம்மாதிரி அயல் நாடுகளுக்குப் போய்வந்த காரணத்தால், அச்சமூகத்திலுள்ள பெரும்பாலான பெண் கள் இன்று கல்வித் துறையிலும், அதிக மாக ஈடுபட்டுத் தங்கள் அறிவுக் கண்களைப் பெற்றுவருகிறார்கள். வெளி நாடுகளுக்குப் போய்வரு முன்பு அவர்கள் சமூகத்துப் பெண்கள் கல்வி கற்பதில் மிகவும் குறை வான எண்ணிக்கை யுள்ளவர்களாகவே இருந்தார்கள். இப்பொழுதுதான் அக்குறை ஒருவாறு நீங்கிக்கொண்டு வருகிறது.

**கல்வியின் தாதா**

உலகப் பிரசித்தி பெற்ற வள்ளல் அண் ணுமலை யவர்களின் தருமங்களைக் குறித்து மேலே கூறப்பட்ட தல்லவா? அத்துடன் அவரது தரும குணத்தைப் பற்றிப் பேசா மல் விட்டுவிட முடியவில்லை. தென்னிந்தி யாவில் பல வேத சாஸ்திரப்பள்ளிகளை அவர் நிறுவியதோடு, நிறுவியுள்ளவைகளுக்கு நன் கொடைகள் கொடுத்தும் உதவியிருக்கிறார்.

மதுரையிலுள்ள மதுரைக் கல்லூரிக்கும் அமெரிக்கன் கல்லூரி உணவுச் சாலைக்கும் ஏராளமாக உதவியுள்ளார்.மதுரைக்காலேஜ் கட்டிட இடத்திற்கு ரூ. 30,000 கொடுத்

துள்ளார். திருச்சி நேஷனல் உயர்தரப் பள்ளிக்கும், சென்னையிலுள்ள பி. சுப்பிரமணியம் உயர்தரப் பள்ளிக்கும், டேராடூன் இந்தியப் பொதுப் பள்ளிச் சங்கத்துக்கும், டில்லியிலுள்ள இர்வின் பள்ளிக்கூடத்துக்கும், பர்மாவிலுள்ள மோல்மீன், கன்பே, இரங்கூன் முதலிய இடங்களில் புதுப் பள்ளிக்கூடங்கள் அமைப்பதற்கும், கொழும்பில் பல பள்ளிகளுக்கும், சென்னை ராமகிருஷ்ண மிஷன் பள்ளிக்கூடத்துக்கும் உதவி செய்திருக்கிறார்.

இந்நூலின் கர்த்தாவாக இருக்கும் ராஜா ஸர் அவர்கள், மக்களிடையே கல்வி பரவவேண்டு மென்பதிலும், இந்நாட்டின் வருங்கால இளைஞரின் வாழ்க்கை சீர்பெற்றிருக்க வேண்டுமென்பதிலும் எத்தகைய பேராவல் கொண்டிருக்கிறார் என்பது, கீழ்க் குறிப்பிட்டிருக்கும் ஒரு சம்பவத்தின் மூலமாகத் தெற்றென விளங்கும்.

### முக்கிய சம்பவம்

1917-வது ஆண்டில் ஒரு முக்கியசம்பவம் நிகழ்ந்தது. ராஜா ஸர் அவர்களின் தமையனரான திவான்பகதூர் ராமசாமி செட்டியாரவர்கள் சிதம்பரத்தில் டவுன் ஹைஸ்கூல் என்ற ஒரு ஸ்கூலை 1914-ம் ஆண்டில் ஸ்தாபித்திருந்தார். பிறகு, 1917ல் அந்த

ஸ்கூலுக்கு ஆண்டு விழா நடைபெற்றவுடன் மூலதனமாகப் பெருந்தொகை ஒன்று வைக்கப்படல் வேண்டுமென்று அங்கு குழுமியிருந்த அறிஞர்கள் திரு. ராமசாமி செட்டியாரவர்களைக் கலந்தனர். அவர் தமக்கு இளைஞரான அண்ணுமலையைக் கலவாது முடிவு கூறுவதற்கில்லையென்று கூறி அண்ணுமலையைக் கலந்தார்கள். முப்பதினுயிர ரூபாய் மூலதனம் வைப்பின் போதுமென்று பலரும் அபிப்பிராயப் பட்டனர். ராஜா அவர்கள் கொடுப்பதற்கியலாது என்று கூறியிருப்பார், அல்லது நிர்வாகக் குழுவினர் கேட்ட தொகையில் சிறிது குறைத்துக் கொடுத்திருப்பார், இன்றேல் கேட்ட தொகையைக் கொடுத்திருப்பார் என்று வாசகர்கள் நினைக்கலாம். அதுதான் இல்லை! பிறகு? அவர்கள் வேண்டியதற்கு மேலாக இருபதினுயிர ரூபாய் கொடுத்து, அதாவது ஐம்பதினுயிர ரூபாய் தற்காலிகமாகக் கொடுத்துதவினுர். என்னே இவரின் பெருந்தன்மை? வயதில் இளைஞராக இருந்தும், அறிவில் மிகுந்தும், ஈகையில் வெகு தாரளமாகவும் விளங்குவது கண்டு, பள்ளிக்கூட நிர்வாகக் குழுவினர் திகைத்துப் போயினர். பிற்கால வாழ்வில் நமது அண்ணுமலை கல்வியின் தாதாவாக விளங்குவார் என்றும் பேசி முடிவு கட்டினுர்கள்.

பெண் ணரசிகளுக் கென்று அவர் செய் திருக்கும் கானுடுகாத்தான் பெண்ட்லண்ட் மருத்துவச் சாலே தருமத்துடனும், சென்னே வெல்லிங்டன் கிளப் தருமத்துடனும், அண் ணுமலே நகர் மாதர் சங்கம், லேடி அம்பில் வைத்திய சேவகிகள் சங்கம், நீலகிரிப் பெண் கள் கிளப், மயிலே மாதர்கள் கிளப் முதலி யவைகளுக்கு நன்கொடைகள் வழங்கிய பெருந் தருமக் குறிப்புக்களேயும் சேர்க்க வேண்டியது மிகமிக அவசியம்.

இவைகளேத் தவிர ஜீவகாருண்யப் பெரு நோக்கங்கொண்டு, இந்திய செஞ்சிலுவைச் சங்கத்துக்கும், சென்னேக் கிறிஸ்தவ இளே ஞர் சங்கத்துக்கும் தாராளமாய்ப் பண உதவிகளேச் செய்திருக்கிருர். சிதம்பரத்தி லேயே ராஜா அண்ணுமலே நகர மண்டபம் (The Raja Annamalai Town Hall), பூந் தோட்டம் (Park) முதலியவைகளேயும் பொதுஜன நன்மைக்காக நிறுவியிருக்கிருர்.

சென்ற 1914-1918ல் நடந்த உலக மகா யுத்தத்திற்கும், தற்போதைய மேநாட்டு யுத் தத்திற்கும் ராஜாவால் பெரும் பெரும் நன் கொடைகள் கொடுக்கப்பட்டது சரித் திரத்திலிருக்கிறது. இவ்வளவு பெரிய தர்மங் களேயும் செய்திருக்கும் ராஜா அவர்களே

வருங்கால சந்ததிகள் 'கோடி தனங் கொடுத்த கொடை வள்ளல்' என்று அழைக்குமானால் அது எக்காலத்துக்கும் பொருத்தமான புகழ் வார்த்தையாக இருக்குமன்றோ?

### அரசியல் அரங்கத்தில்

அரசியலிலும் ராஜா ஒரு முக்கியமான பெரிய மனிதர் என்பதை நாம் குறிப்பிட வேண்டும். பொதுவாக உலக அரசியல் எதிலுமே, உலகத்துப் பணக்காரர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதை நாம் தெரிந்து கொண்டிருக்கிறோம். அதிலும் இந்தியாவைப் பொருத்தவரை பணக்காரர்களுக்கும் அரசியலுக்கும் நெருங்கியதொடர்பு இருந்து வந்திருக்கிறது. அப்படியிருக்க, நமது அண்ணாமலை மட்டும் சும்மா விருந்துவிட முடியுமா? 1916-ல் சென்னை அரசாங்கத்தாரால் மாற்றியமைக்கப்பட்ட பழைய சட்டசபையில் (Pre-reform Council) அங்கத்தினராகி, 1920 வரை தொண்டாற்றினார். பிறகு அந்தக் கவுன்சில் மாற்றமடையவே மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டார். இம்மாதிரியாக மூன்று தடவைகளில் அவர் அரசியல் அரங்கத்தின் முன்னணியில் நின்று பொதுநல சேவகரானார். அப்படியிருந்தும் அவரது

மனம் சமாதானமடையவில்லை. அமைதி யைத் தராத பலவித மனப்பான்மையுடைய கௌன்சிலில் அங்கம் வகித்திருப்பதில் என்ன ருசி? மேலும் ராஜா ஸர் அண்ணுமலை சம்பாத்தியக்கார அரசியல் தலைவரல்ல! அவர் கௌரவம் விரும்புகிற ஓர் அரசியல் அங்கத்தினர்தான். அத்துடன் அவருக்கு அரசியலில் இருக்க வேண்டியதும் அவசியம் என்றே தோன்றிற்று. அதனுல் அவர் அங்கும் புத்திசாலித்தனமான வேலைகளைச் செய்ய ஆரம்பித்தார். ஒன்றுபட்ட மனப் பான்மையில்லாதவர்களை யெல்லாம் ஒற்றுமையாக்கி ஒரு கட்சியாக அமைக்கும் வேலை அவருக்குச் சரி எனப்பட்டது. எனவே அதற்கு முன்பு பனகால் அரசரால் நிறுவப்பட்டிருந்த ஜஸ்டிஸ் கட்சியில் அவர் சேர்ந்தார்: அவர் ஜஸ்டிஸ் கட்சியில் சேர்ந்தது முதல் அக் கட்சிக்கும் ஒரு பெரிய சேவையாளராயும், கௌரவ மிக்காராயும் அவரது தன்மைக்கேற்ப இருந்துவந்தார். இப் பெரியாரால் கட்சிக்குப் பெரும் சிறப்பு உண்டாயிற்று.

### கட்சிப் பற்று

அந்தச் சமயத்திலே தஞ்சையில் ராஜாவின் வீட்டில் ஜஸ்டிஸ் கட்சித் தலைமைப் பதவி சம்பந்தமாய்ப் பல குளறுபடிகள்

நடந்தன. ஆயினும் மிகமிக மன உறுதியுட னிருந்து அந்தக் குளறுபடிகளை யெல்லாம் சமாளித்தது மிகச் சாமர்த்தியமான வேலை யென்றே சொல்லவேண்டும். உறுதியாய் நின்று சமாளிப்பதென்பதுதான் சாதாரண காரியமா? அப்படிப்பட்ட நிலைகளில் மட்டுமல்ல, எந்த ஒரு பெரிய காரியத்தை யும் சமய சந்தர்ப்பங்கட்குத் தக்கபடி, ராஜ தந்திரியைப் போல இருந்து, தம் மன நிலைக் கும் விரோதமன்னியில் முடிவுபெறச் செய் வதிலே, ராஜாவின் சாமர்த்தியத்தை மெச்ச வேண்டியதுதான்.

பிரசித்தி பெற்ற பனகால் மன்னருக்குப் பிற்காலம் பெரும்பாலும் ராஜா ஸர் அண்ணு மலையின் வழியிலேயே ஜஸ்டிஸ் கட்சி நின் ருெழுகியது என்று கூறினேம். ஆம்! அப் படி யிருந்தும் பல வேற்றுமையுடைய மனப் பான்மைகள் உண்டாகவே, அதைச் சமா ளிக்க ராஜா தாம் ஒருவகையில் தனித்து விடலாம் என்று கருதி, ஜஸ்டிஸ் கட்சியின் தலைமைப் பதவியையும் தமக்கு வேண்டா மென்று ஒதுக்கிவிட்டார். ஆனல் ஜஸ்டிஸ் கட்சியின் தலைமைப் பதவியோ, ராஜாவின் அன்புமிக்க மைந்தரான குமார ராஜா ஸர் முத்தையா செட்டியாரிடம் போய்ச் சேர்ந் தது. ஸர் முத்தையா செட்டியார் அன்று முதல் இன்றுவரை அக் கட்சியிலே நின்று

தமது அரசியல் வேலைகளைச் செவ்வனே நடத்திக்கொண்டு வருகிறார். ஜஸ்டிஸ் கட்சியில் பிராமணர்களும் அங்கம் வகிக்கலாமென்ற நிலைமை அவர் காலத்தில்தான் வந்தது. அதன்மூலம் ஸர் முத்தையா தமக்குள்ள சமரச மனப்பான்மையைத் தமிழ் நாட்டினருக்குக் காட்டிக்கொண்டுவிட்டார். இதனால் ஸர் ஏ. பி. பாத்ரோ போன்ற அரசியல் சேவையாளர்களுக்குக் கட்சியினிடம் சிறிது மன வருத்தம் உண்டானதென்றாலும் நாளடைவில் அது சமாளிக்கப்பட்டுவிட்டது. தந்தையும், தனயருமாக ஜஸ்டிஸ் கட்சிக்குச் செய்த சேவைகள் பல. அவைகள் அந்தக் கட்சியின் சரித்திரத்தில் இன்றும் நிலைபெற்றிருக்கின்றன. மேலும் ராஜா அண்ணாமலையால் செட்டியார் சமூகத்தினருக்கு மற்றும் பல நன்மைகள் கிடைத்தன. அவற்றில் முக்கியமாய் நாம் குறிப்பிடத் தக்கது ஒன்று. சட்ட சபைகளில் செட்டியார் சமூகத்தினருக்கு இல்லாமலிருந்த ஒரு ஸ்தானத்தையும் அவர் உண்டாக்கினார். அதன் மூலம் இந்தியாவில் அச்சமூகத்தினருக்கு என்றும் மங்காத ஒரு கீர்த்தியை அரசியலில் உண்டாக்கினார் என்று சொல்வதே பொருந்தும்!

## வாழ்க்கையின் லட்சியம்

"புகழ்புரிந்த இல்லிலோர்க்கு இல்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை." —குறள்

வெற்றித் துறையில் போய்க்கொண்டிருக்கும் ஒரு மனிதன் எந்தப் பெரியதொரு அறைகூவலையும் ஏற்றுக்கொண்டு விடுகிறான். அரசியலிலோ, சமூகத்திலோ, மற்ற வகைக் கட்டுப்பாடுகளிலோ அம் மனிதன் எதையுமே எக்காலத்திலும் லட்சியம் செய்வதே இல்லை! அதைப் போலவே, தமது வாழ்க்கையிலும், லட்சியத்திலும், ஒன்றைத் தாம் நிறைவேற்ற வேண்டும் என்ற நிலைக்கு வந்தபின் ராஜா ஸர் அண்ணாமலை எதற்குமே பின்வாங்குவ தில்லை. 'வெற்றி, அல்லது தோல்வி என்ற இரண்டுதானே எக்காரியத்திலும் முடிவாக இருக்கமுடியும்? பார்க்கலாம், சாமர்த்திய மிருந்தால் வெற்றியே நமக்குக்கிடைக்கும்!' என்ற தத்துவத்துடன் தான் ராஜா எக்காரியத்திலும் இறங்குவார். எப்பாடு பட்டேனும் தமது முழுத்திறமையையும் உபயோகித்துத் 'தோல்வி' என்ற

படிக்குப் போகாமலே வெற்றிப் படித் துறைக்குப் போய்விடுவார். எந்த அறை கூவலேயும் அவர் தைரியத்துடன் ஏற்றுக் கொண்டு விடுவதின் காரணம் இதுதான். இம்மாதிரியே அவர் செய்துள்ள பல வேலே களேயும் இங்கே யெடுத்துக் கூறுவதைக் காட்டிலும் நேயர்களே நேருக்கு நேர் தெரிந்துகொள்ளும்படி விடுவதே சாலச் சிறந்தது.

## கருமமே கண்

ராஜா ஒரு பெரிய பணக்காரர் என்ருலும், எல்லோரிடத்திலும் ஒரே மாதிரியாக நடந்து கொள்வார். சில பணக்காரர்களேப் போல,மோட்டாரில்சென்ருல், வெளிஉலகம் எப்படி யிருக்கிறது என்பதைக் கவனிக்காமல் செல்வதில்லே. தெருக்களில் விளேயாடும் குழந்தைகளே மிக்க கவனத்துடன் பார்த்துக் கொண்டே செல்வார். குழந்தைகள் எங்காவது குறுக்கிட்டால் உடனே மோட்டாரை நிறுத்தி, குழந்தைக்கு விளேயாட்டுக் காட்டி வீட்டில் அழைத்துக் கொண்டுபோய் விட்ட பின்தான் தம் வேலேக்குப் போவார். எவ்வளவு அவசர வேலேயாக இருப்பினும் பொதுவாகக் காரை மெதுவாக ஓட்டிச் செல்லும்படி உத்தரவிடுவார்.

இரவில் அதிக நேரம் தூங்குவதில்லே.

நாளொன்றுக்குச் சராசரி 5 மணி நேரமே அவர் தூங்கும் நேரம். அவரிடம் பேச வருகிறவர்களில் சிலர் மதிப்புமிகுந்த அவரது நேரத்தைக் கவனிப்பதில்லை. அவருடைய நேரம் விலைமிக்கது. அவர் அடிக்கடி கடிகாரத்தைப் பார்ப்பதிலிருந்தே, பேசுகிறவர் காலத்தைக் கொள்ளை கொள்ளுகிறார் என்று நினைக்கிறாரெனத் தெரியவரும்.

நீலகிரி மலையின் உச்சியிலுள்ள கவர்னர் மாளிகையிலிருந்து பார்ப்பின் நன்கு தெரியும் அங்குள்ள ராஜா ஸர் மாளிகை. ராஜா அவர்களிடம் ஒரு கவர்னர் பேசிக்கொண்டிருந்தபோது, 'தாங்கள் இரவில் தூங்குவதே இல்லையா?' என்று ராஜாவைக் கேட்டாராம். ராஜா ஏன் என்று கேட்க, 'நான் இரவில் 10 மணிக்குப் படுக்கப் போகும் போதும், தாங்கள் விளக்கடியில் எழுதிக்கொண்டிருக்கிறீர்கள், நான் காலை எழுந்திருக்கும்போதும் எழுதிக்கொண்டிருக்கிறீர்களே!' என்றாராம்.

தொழில் முறையில் மிக வேகமாய் அவர் செல்வதில்லை; மிகவும் நிதானமாகவே தம் தொழிலையும் நடத்திச் செல்வார். தாமும் எண்ணித் துணிவார்; தம்மோடு தொழில் நடத்த வருகிறவர்களையும் அமைதியாகவே தொழில்செய்யச் சொல்லித் தூண்டுவார்.

வேகமாக நடந்து செல்வதில் அவருக்கு

விருப்பமதிகம். அதிகமாகப் பிரயாணங்கள் செய்வதிலும் அதிக ஆசை யுடையவர். மாதம் ஒன்றுக்கு ஆயிரக் கணக்கான மைல் கள் பிரயாணம் செய்வார். பலவிடங்களில் அவரது தொழில் நடைபெறுவதால் வாரத் தில் மூன்று இடங்களிலாவது அவர் தங்கி யிருப்பார். நித்திரையின் பொழுது பக்கத்தில் ஒரு பென்சிலும், கைப் புத்தகமும் தயாரி லிருக்கும். தூக்க வேளையில் ஏதாவது ஞாப கம் உண்டானால், தம்மோடிருக்கும் கைப் புஸ்தகத்தில் குறித்து வைத்துக்கொண்டு காலையில் எழுந்ததும் குறிப்புப் புத்தகத்தைப் பார்த்து அதன்படி வேலைகளை ஒழுங்காக வும், அமரிக்கையாகவும் நடைபெறச் செய் வார். தினசரி கடிகாரம் எப்படிக் காலத்தைக் கணக்கிட்டுக் காட்டுகிறதோ, அதேமாதிரி ராஜாவும் தமது வேலைகளைக் கணக்காகவும், தாமதமின்றியும் செய்வார். அதுவே அவரது அரிய பெரிய காரியங்களை ஒழுங்காய்ச் செய் வதற்கு ஒரு துணையாக இருந்து, எந்நாடும் புகழ்ந்து கூறும் தென்னாட்டு வள்ளலாகவும் ஆக்கியது.

சங்கீதத்திலும் அவருக்கு விருப்பம் அதி கம். அவர் மயிலாப்பூர் தியாகராஜ ப்ரம்ம சங்கீத சபையின் தலைவராக இருக்கிறார். தமிழ்ப் பாடல்களைப் பெரிதும் ரஸிப்பார். இவ்வளவு அபார வேலைகளிடையேயும், சில

மணிநேரம் ஒதுக்கி, கண்ணுக்கினிய காட்சியையும், காதுக்கினிய கேட்சியையும் அனுபவிப்பார். தமது இளைப்பாறும் மண்டபத்திலும், மற்றும் சில முக்கிய இடங்களிலும் ரேடியோ செட்டுகள் வைத்திருக்கிறார்.

ராஜா அவர்கள் காலை நேரத்தில் தோட்டத்தில் வெகு வேகமாக உலாவுவார். தமது மாளிகையிலுள்ள பழச் செடிகள், புஷ்பங்கள் குரோட்டன்ஸ் முதலியவைகளை ஆராய்ச்சி செய்வார்.

## அனைவருக்கும் ஆறுதல்

துக்கத்தினாலோ, ஆத்திரத்தினாலோ, விவகாரத்தினால் ஏற்பட்ட அவசரத்தாலோ பதட்டத்துடன் பேசுபவர்களை, ராஜா அவர்களுடன் பேச நேர்ந்தால், வெகு பக்குவமாய்ப் பேசி, அவர்கள் போக்கை முற்றிலும் மாற்றி அனுப்புவார். தாம் சந்திக்கும் ஒவ்வொருவரின் சுக துக்கங்களையும் தம்முடையவை என்றே கருதும் சுபாவமுடையவர்.

இத்தகைய சிறப்புக் குணங்களுள்ள அவர் ஒரு சிறந்த "வியாபாரி"—"அரசியல்வாதி"—"கலைஞர்"—"தமிழிசை ரஸிகர்"—"சமூக சீர்திருத்த வாதி"—"சமூகத் தலைவர்"—"பொருளாதார நிபுணர்"—"நிர்வாகத் திறமை மிக்கவர்"—"நீதி பரிபாலனம் செய்பவர்"—"குணநலம் மிகுந்த கோடீச்

வரர்''—“அறப் பணி செய்யும் வள்ளல்''—
“**பிறப்பிலேயே மேதாவி**'' என்று சுருக்கமாகக் கூறி முடித்துக் கொள்ளுகிறோம்.

பார்வைக்கு ராஜா ஓர் இளவரசரைப் போலத் தோற்றமளிப்பார். மத்தியத் தோற்றத்துடன், கவர்ச்சியுள்ள முகமும், கன ஒளியுள்ள கண்களும் பெற்றிருப்பார். அவரைப் பார்க்கும் பொழுதே வசீகரிக்கும் நிலையிலிருப்பார். அழகிய நாசியும், உறுதியான உதடுகளும் பெற்றவர். அவரது கவர்ச்சி மிக்க தோற்றத்துக்குத் தக்கபடி தலையில் அழகு செய்யும் வெண்ணிறத் தலைப்பாவும், நீண்ட அங்கியு (கோட்) மாக அவர் சற்குண ராஜாவாகவே தோற்றமளிப்பார்.

**ராஜாவின் செல்வாக்கு**

இக்காலத்தைப் போலல்லாமல், அக்காலத்தில் செட்டிமார் நாட்டுப் பக்கம், களவு, வழிப்பறிக் கொள்ளை முதலியவைகள் அதிகமாக இருந்தன. ஒரு தினம் சர்க்கார் தபால் பையை யாரோ களவாடிக் கொண்டுபோய் விட்டனர். போலீசார் வெகு முயற்சிசெய்தும் கண்டுபிடிக்க முடியவில்லை. ராஜா அவர்கட்கு விஷயம் தெரிந்தது. செட்டிநாடு முழுமைக்கும் தமது ஆட்களை ஏவிக் கண்டு பிடிக்கச் சொன்னார். சில தினங்களில் கண்டு பிடிக்கப்பட்டு அதை சர்க்காரிடம்

சேர்த்தனர். செட்டிமார் நாட்டில் அவருக் கிருக்கும் அபார செல்வாக்கைக் கண்டு அர சாங்கத்தார் பாராட்டி வியந்தனர்.

**வள்ளலின் பொதுக் குணங்கள்**

ராஜா ஸர் அவர்கள் உலக மேதாவிகளில் ஒருவர் என்பதை ஏற்கனவே கூறியாய் விட்டதல்லவா? அத்தகைய மேதாவியின் பொதுக் குணங்களை அறியின், பிற்கால சந் ததியாருக்கும், தற்கால முள்ளவர்கட்கும் நல்லதோர் படிப்பினையாகுமாதலால் அதனை இங்கு குறிப்பிடுவோம்.

அண்ணாமலை யூனிவர்ஸிடியிலும், ராஜா அவர்களுடைய இல்லத்திலும் தெய்வச் சின்னமென மூன்று வார்த்தைகள் ஆங்கி லத்தில் பொறிக்கப்பட்டிருப்பதைப் பலரும் பார்த்திருப்பார்கள். (Strive, Save, Serve) என்ற பதங்களே அவைகள். அவை யாவன :— உழைத்தல், காத்தல், கொடுத்தல். கஷ்டப்பட்டு உழை, உழைத்துக் கிடைத்த பொருளைக் காப்பாற்று, காத்த பொருளைத் தருமஞ் செய் என்பவையே! இந்த அரு மொழிகள் வெறும் வாசா கைங்கரியமல்ல என்பதை ராஜா ஸர் தமது அனுபவத்தில் காட்டியிருக்கிறார். அவ்வழி நிற்பதே அவ ருடைய கொள்கை என்பதை அவருடைய சரித்திரம் விளக்கும்.

யாரிடத்தும் அமைதியாகவும், அன்பாக வும் அவர் நடந்துகொள்வார். தமது சமூக வாலிபர்களிடத்து அவருக்கு ஒரு தனிப் பிரியம் உண்டு. அவர்களை ஆதரிப்பதிலும் அதிகத் திருப்தி யடைவார். அவர்கள் ஒவ் வொருவருக்கும், "உழைத்தல்" "காத்தல்" "கொடுத்தல்" என்ற வார்த்தைகளை உப தேசிப்பார். வாலிபர்கள் சுறுசுறுப்பாகவும், புத்திக் கூர்மையாகவும் இருக்க வேண்டு மென்று உபதேசிப்பார்.

## தமிழ் மொழிப் பற்று

தமிழ் மொழியினிடத்து அளவிடற்கரிய பற்றுதல் ராஜாவுக்குண்டு. திருக்குறளையும் மற்று முள்ள தமிழ் நூல்களையும் அவர்கள் அடிக்கடி ஆராய்ச்சி செய்வது வழக்கம். தமக்குள்ள எத்தனையோ வேலைகளுக் கிடையே அவர்கள் தமிழ் மொழியினிடத் தும் அன்பு காட்டுவது மிக மிக விசேஷ மல்லவா? தமிழ் வித்துவான்களிடம் கவி தைகள் கேட்டு மகிழ்வதிலும்,தமிழ்மொழிப் பாட்டுக்களைத் தமிழிசைப் பாடகர்களிட மிருந்து கேட்டு மகிழ்வதிலும் அளவற்ற பிரியமுண்டு. அவர்களை ஆதரிப்பதையும் ராஜா மறப்பதில்லை. இலக்கிய கர்த்தாக்கள், கவிவாணர்களை யெல்லாம் தர்க்க முறையில் கலந்து ஆராய்ச்சி செய்வதையும் ராஜா மிக

விரும்புவார். இம்மாதிரி, கலை, சங்கீதங்
களில் அவர்களுக்குள்ள பற்றுதலே பிறகு
தமிழிசைக்கும் தொண்டு செய்யும்படி
அவர்களுக்கு ஒரு நினைப்பை உண்டுபண்
ணிற்று. அதை அடுத்த அத்தியாயத்தில்
காணலாம்.



## தமிழிசைத் தொண்டு

"தமிழுக்கு அமுதென்று பேர்—அந்தத்
தமிழ் இன்பத் தமிழ் எங்கள் உயிருக்கு நேர்"
—பாரதிதாஸன்

ஒப்பாரு மிக்காரு மின்றி எல்லாவகைத் தொண்டுகளையுஞ் செய்துவிட்ட ராஜா, மற்றும் ஒரு பெருந் தொண்டு மட்டும் பாக்கியிருப்பதை உணர்ந்தார். அதுதான் தமிழ்நாட்டுப் பழம் மன்னர்களும் வள்ளல்களும் பண்டைய நாட்களில் செய்த தமிழ்த் திருத்தொண்டு: அதாவது இன்று தமிழ் நாடெங்கும் முழங்கப்பட்டு வரும் தமிழ் இசைத் தொண்டு.

தமிழிலே, எண்ணற்ற இசைவாணர்கள் இருந்திருக்கிறார்கள். நம்முடைய தலைமுறையிலுங் கூட இருக்கின்றார்கள். ஆயிரக்கணக்கான பாடல்கள் இருக்கின்றன. ஆனால் தமிழிலும், தமிழ் நாட்டிலும், தமிழ் இசைப் பாட்டுக்கள் நாளுக்கு நாள் உயிருக்கே போராடிக் கொண்டிருக்க வேண்டிய நிலை இடைக் காலத்தில் ஏற்பட்டுவிட்டது. இம்

மாதிரி தமிழ்ப் பாட்டுக்கள் உயிருக்குத் திண் டாடிக் கொண்டிருப்பதை ராஜா கண்டார். வளர்ந்து வரும் ஒரு சமுதாயத்துக்கு அதன் முக்கிய கலைகளுள்·ஒன்ருன இசைக் கலை, மிகவும் இன்றியமையாத தென்பதை அவர்கள் உணர்ந்ததால், அதை வளர்ப்பதற்கென்று தமது தருமக் கைகளைத் திறந்தார். ஒரு பத் தாயிரம் ரூபாய் ஆரம்ப நன்கொடையாக அளித்தார்! சிதம்பரம் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திலே இனி வருடா வருடம் இசைப் பாட்டுப் போட்டிகள் நடைபெற வேண்டுமென்றும், அதில் தேர்ச்சி பெறுகிற வர்களுக்கு இந்த ரூபாயிலிருந்து தக்க பரிசுகள் கொடுக்கப்பட வேண்டு மென்றும் திட்டம் செய்திருக்கிருர் அண்ணுமலை யுனி வர்ஸிட்டி மூலமாக.

சங்கீதக் கச்சேரிகள் என்று எடுத்துக் கொண்டால், பாடுகிறவர்கட்கும் அர்த்தம் தெரியாமல்,'கேட்பவர்களுக்கும் புரியாமல், அங்கே இப்பொழுது வடமொழிப் பாடல் களும், கன்னடப் பாடல்களும், தெலுங்குக் கீர்த்தனங்களுந்தான் முதன்மையாகப் பாடப்படுகின்றன. இந்தமாதிரி பாடப்படு வதில் தமிழர்கள் வெறும் நாத - அல்லது ஓசை யிசையை மட்டுந்தான் கேட்டுத் தலையை ஆட்ட முடிகிறது என்று சொல் வதை யாரும் மறுக்க முடியாது. வேறு

மொழிப் பாடல்களில் அமைக்கப்பட்டிருக்கும் வார்த்தைகளுக்கு என்ன அர்த்தமென்றே புரிந்து கொள்ள முடியாமலிருப்பதுதான் நம்மவர் ஓசை யின்பத்தை மட்டும் உணர்வதுடன், காதிருந்தும் செவிடர்களைப் போலும், கண்ணிருந்தும் குருடர்களைப் போலும், அறிவிருந்தும் அசடர்களைப் போலும் இருக்க வேண்டி யிருப்பதற்குக் காரணம்!

தமிழ் நாட்டிலே, பிற மொழியாளர்களையும், பிற நாகரிகங்களையும் கண்மூடித்தனமாகப் பின்பற்றும் 'சமதர்ம' நோக்கத்தால் வந்த பெரும் வினை இது! 'குதிரை தூக்கிப் போட்டது மன்னியில் குழியும் தோண்டியது போல்', பிறமொழியி லுள்ள இசைப் பாடல்கள், தமிழிலேயும் இசைப் பாடல்கள் இருக்கின்றன என்பதைக்கூட நம்மவர் மனத்திலிருந்து மறையச் செய்து விட்டன. இப்படி யிருக்கும் நிலையில் நம்முடைய இசைப் பாடல்கள் மீண்டும் தலையெடுப்ப தென்றால் அது சாதாரணமான ஒரு சிறிய காரியமா? அதையெல்லாங் கருதியே ராஜா, தமது பணத்தாலேயும், அறிவாலும், ஊக்கத்தாலும் மக்களைத் தட்டி யெழுப்ப முயற்சி யெடுத்துக் கொண்டிருக்கிறார். தமிழிசை வளர்ச்சிக்காக ராஜா அவர்கள் செய்திருக்கும் இப்பெருந் தொண்டு, தமிழிசைக்

கும், தமிழ் மக்களுக்கும் செய்த பெருந் தொண்டு என்பதைக் கல்லின் மேல் பொறிக்க வேண்டியதாகும். இந் நூலின் முகப்பிலுள்ள ராஜா அவர்களின் திருவுருவத்தைத் தமிழிசையில் புத்துணர்ச்சியும், புத்துயிரும் உண்டாக்கிய புனித வள்ளலின் திருவுருவம் என்றே அன்பர்கள் மதிப்பார்கள் என்று நம்புகிறோம்.





சென்னை அடையாற்றில் உள்ள செட்டிநாட்டரசர் மாளிகை

## தமிழ் நாட்டின் கோடீச்வரர்

" அறனீனு மின்பமு மீனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்." — குறள்

பொதுவாக அண்ணுமலையாரை ஒரு ஹென்றி போர்டுடனே, நிஜாம் மன்னருடனே ஒப்பிட்டுச் சொல்ல வேண்டியதில்லை; அல்லது, 'லார்டு' என்று மேல் நாட்டினரைப் போல் சிறப்புப் பெயராலும் அழைக்க வேண்டியதில்லை. ஆனுல் தென்னுட்டின் கொடைவள்ளல் என்று கட்டாயம் சொல்லித்தா ஞகவேண்டும். அண்ணுமலையாரின் பணம் எவ்வளவு இருக்கிறது என்று யாரும் கேட்டால், நாம் அதற்குப் பதிலாகப் புள்ளி விவரங்களுடன் போட்டுக் காட்டுவது அசாத்தியம். கேட்பவரை நாம் கூட அழைத்துச் சென்று சில மாளிகைகளை மட்டும் காட்டிவிட்டு, மற்றைச் செல்வங்களை அவரே யூகித்துக் கொள்ளும்படி செய்யமட்டும் இயலும். கானுடுகாத்தானிலுள்ள முதல் மாளிகை மூன்று லட்ச ரூபாய்கள் பெறுமதியுள்ளது; இரண்டாவது,

செட்டி நாட்டில் கட்டப்பட்டிருக்கும் பல லட்ச ரூபாய்கள் மதிப்புள்ள அரண்மனை யெனக் கருதப்படுகிற மற்ருெரு மாளிகை, செட்டிநாட்டு ரயில் நிலயத்தில் அழகுடன் தோற்ற மளிக்கும் மண்டபம்; இவைக ளுடன் சென்னையில் அடையாறும் சமுத்திர தேவியும் ஒன்று சேருமிடத்தில் காலைச் சூரியனை முகமன் கூறி வரவேற்பது போல் அமைந்திருக்கும் பெரு மாளிகை - இவை யெல்லாம் கண்கொள்ளாக் காட்சிகள்! அடையாற்று மாளிகை சுமார் பத்து லட்ச ரூபாய்கள் பெறும் என்று மதிப்பிடப்படு கிறது. இந்த மாளிகை, மன்னர் மன்னர்கள், வைஸ்ராய்கள், கவர்னர்கள், பிரபுக்கள், மற்றுமுள்ள அரசியல் சமூக சம்பந்தமான தலைவர்கள் எண்ணற்ருேர்களைப் பல சந்தர்ப் பங்களில் தங்கியிருக்கச் செய்து, பொன் வெள்ளிப் பாத்திரங்களில் விருந்துகளை அளித்து, அவரவர்களின் நன்மதிப்புக்களை யும் பெற்றிருக்கிறது. இவைகளைப் பற்றி மட்டும் குறிப்பிட்டுவிட்டாலே ராஜா அண்ணுமலை எத்தகைய பணக்காரர் என் பது சுலபமாய்த் தெரிந்து போகும். தனிப் பட்ட ஒரு மனிதர் பெயரால் சர்வகலாசாலை யும், 'அண்ணுமலை நகர்'. 'செட்டி நாடு' ரயில் நிலயம் முதலியவற்றையும் கவனித்தால் அவரது பெருமை நன்கு தெரியும். இது

வரை அவர் $1\frac{1}{2}$ கோடி ரூபாய்களுக்கு மேல் பல்வகைத் தருமங்கள் செய்ததாக மதிப் பிடப்படுகிறது. மேலும் பணத்திலே பிறந்து, பணத்திலே வளரும் செட்டிமார்க ளது சமூகத்துக்கே தலைமையாயிருக்கும் நிலைமையினாலும் கோடீச்வரத் தமிழர் அவர் என்பது நன்கு தெரிகிறது.



# அறுபதாவது ஆண்டு விழா

"இன்னுமொரு நூற்றாண்டிரும்"

— ஆழ்வார்.

நாம் இந்தச் சரித்திரத்தை வெளியிடும் நேரத்தில் ராஜா ஸர் அண்ணாமலைக்கு அறுபது ஆண்டுகள் நிறைகின்றன. செட்டியார்களது சமூகத்திலே அறுபதாண்டு நிறைந்த தம்பதிகளுக்கு **அறுபதுக் கறுபது சாந்தி** என்ற மகத்தான வருடக் கொண்டாட்டம் வழக்கமாய் நடைபெறுவதுண்டு. ராஜா அவர்களுக்கும் அதே கொண்டாட்டம் மிக விமரிசையாய் நடைபெறுகின்றது. கானாடுகாத்தானிலும், அண்ணாமலை நகரிலும் இதற்கென்று நடைபெறும் கொண்டாட்டங்கள் மிக விமரிசையானவை. செட்டிமார் நாட்டின் விசேஷ வைபவமாக இது கொண்டாடப்படுகிறது.

அறுபது வருடங்களாகத் தமது வாழ்க்கையின் லட்சியம் 'தொண்டு, சேவை, அறப் பணி, தர்மம், இறை வழிபாடு தவிர வேறொன்றுமில்லை' என்று செயலில் காட்டி வரும் இப் பெருந்தகையார் இன்று போல்

என்றும் இளமையோடிருந்து தொண்டு புரிய வேண்டும் என்று யாவரும் வாழ்த்து வர். இளம் பிராயத்திலிருந்தே விடாமுயற் சியும், ஊக்கமும் உறுதியும் கொண்டு, தொழில் முறைகளைக் கசடறக் கற்றுப் பெரும் பொருள் தேடிய அவருடைய ஆற் றலைப் புகழ்வதா? தேடிய பொருளெல்லாம் 'சிவன் தந்தது' என்றெண்ணிப் பாது காத்து, தான தருமங்கள் செய்து வருவ தைப் புகழ்வதா? 'அண்ணுமலையாரின் செல்வம், அவர் தவிர மற்றெல்லோர்க்கும் சொந்தம்!' என்று எண்ணும்படி, ஊருணி நீர்போல் நாட்டார் அனைவருக்கும் பயன் படுவதைப் புகழ்வதா? கொடுத்துக் கொடுத் துச் சிவந்திருக்கும் அவர் கரங்களைப் புகழ் வதா, இன்னும் பல கோடி தேடிக் கொடுப் பதற்குத் தேச-உலக-நிலைமைகள் உதவவில் லையே என்ற அவர் ஏக்கத்தைப் புகழ்வதா? செல்வம் விரயமாகாமல் பாத்திரமறிந்து தர்மம் செய்வதைப் புகழ்வதா? கொடுக்குந் தொகைகளைப் புகழ்வதா, உதவி பெறும் மக்களும் ஸ்தாபனங்களும் செழித்து இன் புறுவதைக் கண்டு மகிழும் அவர் மகிழ்ச்சி யைப் புகழ்வதா? அவர் சுற்றந் தாங்கும் பெருமையைப் புகழ்வதா, தம் சமூகத்தின் மேம்பாட்டை அதிகரிக்க உழைப்பதைப் புகழ்வதா? நாடும், மொழியும், கல்வியும்,

கலைகளும் செழிக்க அவர் புரியும் சேவை களைப் புகழ்வதா? எந்தப் புகழும் அவருக்கு ஏற்புடையது. பொருட் செல்வமும், அருட் செல்வமும் மிக்க இச் சீமான் ஏனைய பல செல்வர்களுக்கும், ராஜாக்களுக்கும், மகா ராஜாக்களுக்கும் வழிகாட்டியாக விளங்கு கிறார்.

தென்னாட்டு வள்ளல், தமிழ்த் தாயின் அருந்தவப் புதல்வர், தமிழிசை தாதா ஆகிய இவ்வள்ளல், பன்னலமும் பெற்றுப் பல் லாண்டு வாழ வாழ்த்துவோமாக!

வாழ்க தமிழ் மொழி!
வாழ்க அண்ணாமலை!

